இதோ!

## உங்களுக்காக
## புதியவிதமான உயர்ந்த ரக,
## காம்பு மண்வெட்டி




# டாடா
# அக்ரிகோ

எல்லா பெரிய
இரும்பு கடைகளிலும்
கிடைக்கும்

**தி டாடா அயரன் அண்டு ஸ்டீல் கம்பெனி லிமிடெட்.**
தலைமை ஸேல்ஸ் ஆபீஸ்: 23 B, நேதாஜி சுபாஷ் ரோடு, கல்கத்தா.
பிராஞ்ச் ஸேல்ஸ் ஆபீஸ்:
ஓரியன்டல் பில்டிங்ஸ், 108, அரண்மனைக்காரத்தெரு, ஜீ. டி. மதராஸ்.

# கொலம்பியா
## புதிய வெளியீடு

ஜூபிடர்ஸ்
**வேலைக்காரி**
T.V. ரத்னம்
& பார்ட்டி

டாக்கிப் பாட்டுகள்
GE.6638
**வாழ்விலே சுகம்**
கோரஸ் - 2 பாகங்கள்

முந்திய ரிகார்டுகள்

K.V. ஜானகி & P. லீலா
GE 6600 — ஓரிடந்தனிலே / லாலீ லாலீ (P. லீலா & பார்ட்டி)

T.V. ரத்னம் & P. லீலா
GE 6606 — வாழிய நீடூழி / ஆட வருவாயா கண்ணா (T.V. ரத்னம்)



ஸரஸ்வதி ஸ்டோர்ஸ்..... மதராஸ். 2.



# கிரிக்கெட்காரர் கீல்வாதத்தினால் அவுட்டாக்கப்பட்டார்



**ஒரு முறை 'க்ருஷன்' சாப்பிட்டபின் மறுபடியும் தருநீ**

சாம்ஸனின் ஓட்டங்கள் கீல் வாதத்தினால் பாழடைந்தன. கூரிய வலி அவனுடைய கீல்களையும் தசைகளையும் பிடித்தன. மட்டையைப் பிடிப்பது கூட பெரும் வேதனையாக இருந்தது. பந்தயத்தினின்று ஓய்வு எடுத்துக் கொண்டபோது தனது கிரிக்கெட் விளையாட்டே ஓர் முடிவெல்லைக்கு வந்து விட்டது என நினைத்தான். அவன் தலைவன் சில யோசனைகள் சொன்னான்: 'தினமும் காலை உண்டிக்கு முன் 'க்ருஷனை'ப் பரீக்ஷியுங்கள்.''

சாம்ஸன் அவ்வாறே செய்தான். மூன்று வாரங்களுக்குப் பின்னரே ஓர் வலுவுள்ள பந்தயத்தில் அறுபது ஓட்டங்கள் எடுத்துவிட முடிந்தது. அவனுடைய விளையாட்டு முன்னைவிட அதிக மேன்மையுடன் விளங்குற்று — 'க்ருஷ'னுக்கு நன்றிகள். நீங்கள் கஷ்டப்படும் எல்லாவித கீல்வாதமும் ஒரே ஒரு முக்கிய காரணத்தைக் கொண்டுள்ளது — மூத்திர நீர் கணுவிலும் தசையிலும் சேர்ந்துக்கொண்டு விடுவதாம். உங்கள் உடம்பிலின்று மூத்திர நீரை வெளியேற்ற ஒரே ஒரு வழிதான் உளது — அதுதான் மூத்திரக் காய்களிலின்று நீரை வெளியேறச் செய்வது. 'க்ருஷ'னுடைய ரகசியம் அது செய்யும் இரட்டை வேலையில்தான் உள்ளது. அது அங்கேயும் குடல்களிலும் ஒருங்கே வேலை செய்து நீர் தங்குமிடங்களிலின்று அவற்றை வெளியேற்றுவதுடன் மறுபடி அவ்விதம் சேரவிடாமலும் செய்கிறது. இன்றே 'க்ருஷ'ன் வாங்குங்கள். கெமிஸ்டுகளிடமும் வியாபாரிகளிடமும் எங்கும் கிடைக்கும். விலை ரூ. 1/10 (மஞ்சள் பெட்டியில்.)




## நீங்கள் கூட அந்த க்ருஷன் உணர்ச்சியை அடையலாம்

DK81. 2.

விரைவில் எதிர்பாருங்கள்!



## சியாமளாவின்

# இன்பவல்லி

[ ஏராளமான பொருட் செலவில் தயாரிக்கப்பட்ட
ஓர் மகோன்னத படம்
ராஜகுமாரி-மந்திரிகுமாரன் காதல் சித்திரம்
ரஸமான சம்பவங்கள் நிறைந்தது ]

நடிகர்கள்:

**மஹாலிங்கம் · சரோஜா**
**சரஸ்வதி · மேனகா · கிருஷ்ணன்**
**மதுரம் · சாமிநாதன் · சஹாதேவன்**
மற்றும் பலர்...

டைரக்ஷன்: **S. நொடானி.**
சங்கீதம்: G. ராமநாதன். பாட்டு: P.R. ராஜகோபால அய்யர்
ஸ்டுடியோ: ரத்னா, சேலம்
ஒளிப்பதிவு: வஸந்தராவ் ஜத்தப். ஒலிப்பதிவு: R.G. பிள்ளை

**ஸூபர் ரிலீஸ்**






**ஸூபர் பிக்சர்ஸ் சர்க்யூட், மதராஸ் 7.**

# விகாரமான வேக்காடு மறைகிறது



## கிட்டத்தட்ட புத்திக் கோளாறுதான்!

"சில மாதங்களுக்கு முன் சரும வேக்காட்டினால் மிகவும் அவஸ்தைப் பட்டேன். அதுவும் இரவு நேரத்தில் படுத்திருக்கும்போது பைத்தியம் பிடித்ததுபோலவே இருந்தது. உங்களது விசித்திர தயாரிப்பாகிய வெல்டர்மாவுக்குப் பெரிதும் நன்றி செலுத்த வேண்டுமென்று நான் மனப்பூர்வமாகக் கூறுவேன். வெல்டர்மாவை சில தடவைகள் உபயோகித்த பிறகுதான் வெந்த சருமம் பூரணமாக சொஸ்த மடைந்தது. அநேக இதர மருந்துகளை உபயோகித்தேன். ஆனால் வெல்டர்மாவுக்கு இணை வேறெதுவும் கிடையாது என்பதே என் உறுதி. எனக்குப் பிடித்த மருந்து அதுதான்."

— மிஸஸ் D. F. சஞ்சர்

### இருவித கிருமி நாசன வேலை

சருமத்தின்மேல் முதல் தடவையாகப் பட்டவுடனேயே வெல்டர்மாவின் இருவித கிருமி நாசன சக்திகளும் வேலை செய்யத் தொடங்குகின்றன. அநேக சரும ரோகங்களுக்கு ஆஸ்பதமான பல்வேறு ரக கிருமிகளை இருமடங்கு வேகத்தில் கொன்று நாசமாக்குகின்றன. அதிலுள்ள கிருமி நாசன சக்திகள் இரண்டும் பல்வேறுவித விஷக் கிருமிகளுக்கு இரண்டு சத்துருக்களாகும்.

### சருமத்தினூடே செய்யும் வேலை

எரிச்சல் அடங்குகிறது. நமைச்சலும் வேக்காடும் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விடுகின்றன. சருமம் சுத்தமாகவும் சுகமாகவும் ஆகிவிடுகிறது. எக்ஸிமா, கொப்புளங்கள், வேக்காடுகள், பருக்கள், மற்றும் சருமத்திற்கு அடியில் ஏற்படும் இதர ரோகங்களெல்லாம் சொஸ்தமாகின்றன. ஏனெனில், வெல்டர்மா சருமத்தினூடே சென்று ரோகத்திற்கு மூலாதாரமான இடத்திலேயே தாக்குகிறது.

நீரில் - எண்ணெய் - சேர்க்கையெனும் அடிப்படையில் தயாரிக்கப் பட்டிருப்பதால் நோய்ப்பட்ட இடத்திலுள்ள விஷத்தை வடிகட்டி வெளியேற்றுகிறது வெல்டர்மா. ஆகையால் மீண்டும் நோய் தொத்தி விடாமல் பாதுகாப்பளிக்கிறது. வழுவழுப்பான வெல்டர்மா பிசுக்கற்றது. கறை படாது, உபயோகித்த இடம் புலனாகாது. ஆகையால் எந்த இடத்திலும் எந்த நேரத்திலும் உபயோகிக்கலாம். எல்லா சிறந்த கெமிஸ்டுகளிடமும்,டீலர்களிடமும் கிடைக்கும்.

ஜியாப்ரே மானர்ஸ் அன் கோ., லிமிடெட்
பம்பாய் — கல்கத்தா — டில்லி — மதராஸ்




DOUBLE-ANTISEPTIC

**Valderma**

THE *Non-Greasy* BALM

V. 1.

"இல்லை யென்ற கொடுமை
உலகில்
இல்லையாக வைப்பேன்"
என்றார் பாரதி
இதை லட்சியமாகக்கொண்டவர்
பட்ட பாடுகளை சித்தரிக்கும்...



ஸ்டார், கிரவுன்
நடைபெறுகிறது

ஸ்ரீ ராஜராஜேஸ்வரி பிலிம் கம்பெனியின்

# நவஜீவனம்

தமிழ்

நாகய்யா • கண்ணாம்பா • எஸ். வரலக்ஷ்மி • ஸ்ரீராமன்
டி. ஏ. ஜயலக்ஷ்மி • டி. ஆர். ராமச்சந்திரன் • எல். நாராயண ராவ் • நடித்தது







குண்டூசி





# அறிவிப்பு




ஓ கே
இரு முறை
சுத்தம் செய்யப்பட்ட
**ஆகார எண்ணெய்**

***இப்பொழுது எங்கும் கிடைக்கும்***

தயாரிப்பவர்கள்:

தி ஈஸ்ட் ஏஷியாடிக் கம்பெனி (இந்தியா) லிமிடெட்,
மதராஸ்.

EAZ-14 TAM



# கல்கி பொருளடக்கம்




மலர் 8 | இதழ் 49 | ஜூலை 3 | விரோதி ஆனி 20உ




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும் சம்பவங்களும் கற்பனையே.

# அவலும் உமியும




இந்தியாவிலும் பாகிஸ்தானிலும் உள்ள அகதிகள் சொத்துப் பிரச்னை சம்பந்தமாகப் பேசுவதற்கு ஸ்ரீ கோபாலசாமி ஐயங்காரும் ஜனாப் ஜபருல்லாகானும் கராச்சியில் நடந்த மகாநாட்டில் கலந்து கொண்டார்கள். எந்தவிதமான முடிவுக்கும் வராமல் மகாநாடு கலைந்தது.




மலர் 8 } தமிழ்த் திருநாடு தன்னைப்—பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் { இதழ் 49

# என்ன செதி?

## அண்டை நாட்டு நட்பு

குறிப்பாக அண்டை நாடுகளின் நட்பை இழக்காமல் இருப்பதுதான் இன்றைய ராஜதந்திரத்தின் சிறந்த அம்சம். எவ்வளவு பெரிய வல்லரசாயினும், அது முக்கியமாக அடுத்துள்ள நாட்டின் நல்லுறவை இழக்க விரும்புவதில்லை. அமெரிக்காவும் கானடாவும் மிகவும் அன்னியோன்னியமாக இருந்து வருகின்றன. அயர்லாந்து பிரிட்டிஷ் தொடர்பை அறவே கத்தரித்துக் கொண்டும்கூட, அதனுடன் பிரிட்டிஷ் சர்க்கார் உறவு கொண்டு வருகிறார்கள். சர்வ வல்லமை பொருந்திய அமெரிக்கா உலகத்திலே எத்தனை நாடுகளின் நட்பைப் பெற முடியுமோ, அத்தனை நாடுகளின் நட்பைப் பெற முயற்சித்து வருகிறது. சமீபத்தில் சுதந்திரம் பெற்ற பர்மா இந்தியாவை அலட்சியம் செய்தது. தான் பிற தேசங்களின் தயவையே நாடவில்லை என்று பெருமையடித்துக் கொண்டது. ஆனால், அதனுடைய சுதந்திரத்துக்கும் சமாதான வாழ்வுக்கும் ஆபத்து நேரவே, பர்மியப் பிரதம மந்திரி இந்தியாவின் நட்பையும் உதவியையும் பெறுவதற்காக இந்தியாவுக்கு ஓடி வந்தார்; பிரிட்டனின் உதவியைப் பெறுவதற்காக அத்தேசத்துக்கும் பறந்து சென்றார்.

வல்லரசுகளும் சிற்றரசுகளும் அடுத்துள்ள நாடுகளின் சிநேகத்தை நாடி வருகையில், சிறிய தேசமான இலங்கை மாத்திரம் தனக்கென்று ஒரு தனி வழியைப் பின்பற்றி வருகிறது. பிரம்மாண்ட தேசமான இந்தியாவின் நட்பை இழப்பதற்கான காரியங்களைக் கர்ம சிரத்தையாகச் செய்து வருகிறது! பூகோள ரீதியாகவும் கலாசார ரீதியாகவும் ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாகத் தொடர்புள்ள இந்தியாவைச் சேர்ந்தவர்களுக்குத் தொல்லை விளைவிப்பதே தாங்கள் சுதந்திரம் பெற்றதன் பயன் என்று இலங்கைத் தலைவர்கள் கருதுகின்றனர் போலும்!

## பொருளாதாரப் போர்வை

இலங்கை சர்க்கார் தங்களுடைய அரசியல் சூழ்ச்சிகளைப் பொருளாதாரப் போர்வையின் கீழ் மறைக்கப் பார்க்கிறார்கள் என்றே சொல்ல வேண்டியிருக்கிறது. ஒரு நாட்டின் மூலதனம் பெருவாரியாகப் பிறநாடுகளுக்குப் போகாமல் தடுப்பது அந்தந்த நாட்டு சர்க்காரின் கடமை என்பதை எவரும் மறுக்க மாட்டார்கள். ஆனால், இலங்கை சர்க்கார் தற்போது கையாண்டு வரும் முறை அந்த நியதியை அடிப்படையாகக் கொண்டது என்று கூற முடியாது. இந்தியர்களை அங்கிருந்து விரட்டுவதற்கு என்னென்ன முறைகளைக் கைக் கொள்ள வேண்டுமோ அவற்றையெல்லாம் கைக் கொள்ள இலங்கை சர்க்கார் முனைந்திருக்கிறார்கள் என்பதையே அவர்களுடைய நடவடிக்கைகள் தெளிவாக்குகின்றன.

இலங்கையில் ஐரோப்பியர்களைக் காட்டிலும் இந்தியர்களின் தொகையே மிகவும் அதிகம். எனினும், இலங்கையிலிருந்து இந்தியர்களைக் காட்டிலும் ஐரோப்பியர்களே தங்களுடைய நாடுகளுக்கு அதிகத் தொகை அனுப்புகிறார்கள். அப்படியிருந்தும் அவர்கள் மாதா மாதம் ஐம்பது பவுன் அனுப்புவதற்கு இலங்கை சர்க்கார் அனுமதி யளித்திருக்கின்றனர். அவர்கள் தங்களுடைய நாட்டுக்குச் செல்வதாயின், 'பர்மிட்' இல்லாமலே, நானூறு பவுன் எடுத்துச் செல்லலாம். ஆனால், ஏழை இந்தியத் தொழிலாளிகளோ வெனில், இந்தியாவிலுள்ள ஏழைக் குடும்பத்துக்கு மாதா மாதம் இருபத்தைந்து ரூபாய்க்கு மேல்

அனுப்பக் கூடாதாம்! அந்த அற்பத் தொகை அனுப்பவும் அவர்கள் எத்தனையோ சடங்குகளை நிறைவேற்ற வேண்டும். இந்தியர்கள் இலங்கைத் தபால் ஆபீஸ்களின் வாயிலில் ஒரு மைல் நீளத்துக்கு மேல் 'க்யூ'வில் நிற்கும் கண்ணராவியும் அத்தகைய சடங்குகளில் ஒன்று.

நேற்று வரையில் இலங்கையைச் சுரண்டி வந்த ஐரோப்பியர்களுக்குச் சுதந்திர இலங்கை சர்க்கார் அவ்வளவு சலுகை அளிக்கும்போது, இலங்கையின் பொருளாதார சுபிட்சத்துக்காகச் சரீரத்தைச் சாராகப் பிழிந்து உழைத்த இந்தியர்கள் விஷயத்தில் மாத்திரம் ஏன் இரக்கமற்று நடந்துகொள்ள வேண்டும்? ஏழை இந்தியர்கள் அனுப்பும் அற்பத் தொகை இலங்கையின் பொருளாதார நிலையைப் பாதித்துவிட முடியாது. உண்மையிலேயே இலங்கையின் பொருளாதார நிலையைச் சீர்ப்படுத்துவதாயின், ஐரோப்பியர்கள் மாத்திரம் ஐம்பது பவுன் அனுப்பவும் நானூறு பவுன் எடுத்துச் செல்லவும் ஏன் அனுமதிக்கப்பட வேண்டும்? இத்தகைய அநீதியை இந்திய சர்க்கார் வெகுவாகக் கண்டித்து இலங்கை சர்க்காருக்குத் தங்களுடைய அபிப்பிராயத்தைத் தெரிவித்திருக்கிறார்கள். மேற்படி கண்டனம் இலங்கை சர்க்காரின் கண்களைத் திறக்குமா? மனதை மாற்றுமா?




"நம்ம பையன் வாங்கியிருக்கிற மார்க்கு இலட்சணம், காலேஜில் நுழைவதற்கே லாயக்கில்லை என்று பிரின்ஸிபால் சொல்கிறார்!"

"அப்படியானால், நம்ம பையன் எடுத்திருக்கிற மார்க்கைக் கொண்டு அவன் காலேஜின் காம்பவுண்டுக்குள்ளேகூட நுழைய முடியாது!"

## குயுக்தி வாதம்

ஆந்திரர்களையும் ஆந்திர மாகாணப் பிரிவினைப் பிரச்னையையும் இந்தியா மறந்து விடக் கூடாது என்பதற்காக ஆந்திர கேசரிகள் அடிக்கடி கூட்டம் கூடிக் கர்ஜித்து வருகிறார்கள்! சென்ற வாரம் அவர்களுடைய கூட்டமொன்று சென்னையில் நடந்தது. அதில் பேசியவர்கள், "சென்னை நகரில் ஆந்திரர்களுக்கு உள்ள உரிமைகளைக் கை விடுவது என்ற பேச்சே எழுவதற்கில்லை" என்று முழங்கினார்கள். பாஷாவாரியாக உடனே மாகாணங்களைப் பிரிக்காவிட்டால், கல்கத்தா உபதேர்தலில் நிகழ்ந்தது போல் தேசம் எங்கும் நிகழும் என்று ஒரு கேசரி எச்சரித்தார். சென்னையைத் தலைநகராகக் கொண்டு ஆந்திர மாகாணம் ஏற்படாவிட்டால், ஆந்திரர்கள் காங்கிரஸை ஆதரிக்க மாட்டார்கள் என்று அவர் மறைமுகமாக மிரட்டினார்.

மற்றொருவர் ஆந்திரர்களுக்கு ஓர் அருமையான யோசனையை எடுத்துக் கூறினார். "சென்னை நகர் உங்களுக்கு வேண்டும் அல்லவா? அப்படியானால், பாஷை, ஜனத் தொகை, அல்லது சரித்திரம் இவற்றை அடிப்படையாகக் கொண்டு அந்தக் கோரிக்கையை வற்புறுத்தாதீர்கள். ஏனெனில், சென்னையிலே தெலுங்கர்களைக் காட்டிலும் தமிழர்களே அதிகமாக இருக்கிறார்கள். எனவே, சென்னை நகரம் இன்றேல் ஆந்திர மாகாணத்தை அமைக்கவே முடியாது என்றும், நிர்வாக வசதியை உத்தேசித்தே சென்னை நகரைக் கேட்பதாயும் சொல்லுங்கள். புதிய தலைநகரை ஏற்படுத்தப் பண வசதி இல்லையென்றும் கூறுங்கள்" என்று அவர் ஆந்திரர்களுக்கு யுக்தி சொல்லிக் கொடுத்தார். நிர்வாக வசதியும் பண வசதியும் இல்லையென்றால், ஆந்திரர்கள் தனி மாகாணக் கோரிக்கையைக் கைவிட்டு விட்டுப் பேசாமல் இருக்கட்டுமே! அவர்களுக்கு நிர்வாக வசதியும் பண வசதியும் செய்து கொடுப்பதற்காகத் தமிழர்கள் ஏன் சென்னையை விட்டுக் கொடுக்க வேண்டும்? இந்தக் கேள்வியை அவர் தன்னைத் தானே கேட்டுக் கொண்டிருப்பாராயின், மேலே குறிப்பிட்ட குயுக்தி வாதத்தில் இறங்கியிருக்க மாட்டார். எனினும் அவரது பேச்சிலிருந்து ஒரு விஷயம் தெளிவாகியிருக்கிறது. அதாவது பாஷை, ஜனத்தொகை, சரித்திரம் இவற்றில் எதைக் கொண்டு பார்த்தாலும் சென்னை நகர் தமிழர்களுக்கே சொந்தமானது என்பதை அந்த ஆந்திரப் பிரமுகர் ஒப்புக் கொள்கிறார் அல்லவா?

# வெறி வெற்றி பெறவில்லை!

பல கோடி மக்களைத் தன்னுடைய ஆதிக்கத்தின் கீழ் வைத்திருக்கும் மகாராணி ஒருவர் திடீரென்று சென்ற வருஷத்தில் ஒரு நாள் ஓர் அரிய பெரிய விஷயத்தை வெளியிட்டார்.

ஒரு தேச ஜனங்கள் மற்றொரு தேச ஜனங்களை அடக்கி ஒடுக்கி ஆட்சி புரியும் காலனி முறை இந்த உலகத்திலிருந்தே ஒழிந்துவிட்டது என்று கூறி, அவர் இப்புவியில் சுதந்திர அபிலாஷை கொண்ட ஜனங்களையெல்லாம் மகிழ்வித்தார்.

அப்போது டச்சு சர்க்கார் அதிகாரிகளுக்கும் இந்தோனேஷ்யக் குடியரசின் தலைவர்களுக்கும் சமரசப் பேச்சு வார்த்தைகள் நடந்துகொண்டிருந்தன.

எனவே, நெதர்லண்ட்ஸ் மகாராணி அவ்வாறு கூறியதைக் கேட்ட உலக மக்கள் இந்தோனேஷ்யர்களுக்குக் கதிமோட்சம் ஏற்பட்டு விட்டது என்று எண்ணினார்கள். இந்தியாவிலிருந்து பிரிட்டிஷார் வெளியேறியதைப் போல் இந்தோனேஷ்யாவிலிருந்து டச்சுக்காரர்கள் வெளியேறப் போவதைக் கண்டு திகைக்க உலகம் தயாராயிருந்தது! தங்களுடைய நாட்டில் அன்னியர் ஆட்சி ஒழிந்து சுதந்திரம் உதயமாகப் போகிறது என்று இந்தோனேஷ்யர்களும் வெகு ஆர்வத்துடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

ஆனால், அந்த மக்களின் நினைவு வெறும் கனவாகியது!

அடிமை வாழ்வு அகன்று ஆனந்த வாழ்வு ஏற்படப் போகிறது என்று எண்ணிவந்த, — அதற்காகக் கொடிய தவம் புரிவது போல் கோரமான போரில் ஈடுபட்டுத் தங்களுடைய வீர தீர பராக்கிரமங்களைக் காட்டிய ஜனங்களின் தலையில் டச்சுக்காரர்கள் பாராங்கல்லைத் தூக்கிப் போட்டார்கள்; அதாவது திடீரென்று அவர்களுடைய தலையிலே குண்டு மாரி பொழியத் தொடங்கினார்கள்.

"காலனி ஆட்சி முறை ஒழிந்து விட்டது" என்று கூறிய டச்சு ராணி, "இந்தோனேஷ்யாவில் மனித சுதந்திரத்தைப் பாதுகாப்பதற்காக டச்சுக்காரர்கள் போரை ஆரம்பித்திருக்கிறார்கள்" என்று ஒரு பெரிய வெடி குண்டைத் தூக்கிப் போட்டார்!

சமரசப் பேச்சு வார்த்தைகள் நடந்துகொண்டிருக்கையிலே டச்சுக்காரர்கள் அவ்வாறு அக்கிரமமாக யுத்தத்தைத் தொடங்கியது உலகத்தையே திடுக்கிடச் செய்தது.

"சர்வ தேசச் சட்டத்தை மீறும் தேசம் உலகத்தின் பரம விரோதியாதலால், அதை நாகரிக நாடுகள் யாவும் பகிஷ்கரிக்க வேண்டும்" என்று கிறிஸ்துவமத குருவான போப் கடுமையாகக் கண்டித்தார்.

"1940-ம் வருஷம் ஹாலந்தில் ஹிட்லர் எவ்வளவு மோசமாக நடந்து கொண்டாரோ, அதைக் காட்டிலும் படுமோசமாக ஹாலந்து அதிகாரிகள் இந்தோனேஷ்யாவில் நடந்து கொண்டிருக்கிறார்கள்" என்று ஆஸ்திரேலியப் பிரதிநிதி ஐக்கிய நாடுகள் சபையிலே டச்சு சர்க்காரை வெளுத்து வாங்கினார்.

"இந்தோனேஷ்யக் குடியரசைப் பாதுகாக்க ஐக்கிய நாடுகள் சபை தவறி விடுமாயின், ஜாவாவில் எரிந்து கொண்டிருக்கும் தீ, டச்சு சாம்ராஜ்யத்தை மாத்திரமல்ல, ஆசியாவிலுள்ள மற்றெல்லா சாம்ராஜ்யங்களையும் தகித்து விடும்" என்று அதே சபையில் இந்தியப் பிரதிநிதி சாம்ராஜ்ய வெறி கொண்ட எல்லா நாடுகளையும் எச்சரித்தார்.

மார்ஷல் திட்டப்படி ஹாலந்துக்கு எவ்வித உதவியும் அளிக்கக் கூடாது என்று அமெரிக்காவில் எதிர்ப்புப் புயல் கிளம்பியது.

இந்தோனேஷ்யாவில் டச்சுக்காரர்கள் நிறுவியிருந்த பொம்மை சர்க்கார்கள்கூட டச்சுக்காரர்களின் அட்டூழியத்தைச் சகிக்க முடியாமல் ராஜினாமா செய்தனர்.

• • •

டச்சுக்காரர்களின் அக்கிரமத்தை உலகநாடுகள் வாயளவில் கண்டித்து வருகையில், இந்தியா வெறும் கண்டனத்துடன் நின்று விடாமல், அவர்கள் மீது தகுந்த நடவடிக்கை எடுத்துக் கொண்டது. டச்சு விமானங்கள் இந்தியா வழியாகச் செல்லக்கூடாது என்று தடுத்தது.

மேலும் உற்ற நடவடிக்கைகளைக் கைக்கொள்ளுவதற்காக இந்தியா

புதுடில்லியில் ஆசிய மகாநாட்டைக் கூட்டியது. அதில் பத்தொன்பது ஆசிய நாடுகளின் சர்க்கார் பிரதிநிதிகள் கலந்துகொண்டார்கள். உலகத்தின் ஜனத்தொகையில் பாதிக்கு மேற்பட்டவர்களின் பிரதிநிதிகள் அடங்கிய அந்த மகாநாடு சில முக்கிய தீர்மானங்களை நிறைவேற்றியது.

டச்சு சர்க்கார் அதிகாரிகள் இந்தோனேஷ்யக் குடியரசின் தலைவர்களை உடனே விடுதலை செய்வதுடன், குடியரசுத் தலைநகரையும் விட்டு வெளியேற வேண்டும்; 1949-ம் வருஷம் அக்டோபர் மாதம் முதல் தேதிக்குள் இந்தோனேஷ்யாவில் அரசியல் நிர்ணய சபை அமைக்கப்பட வேண்டும். 1950 ஜனவரி மாதம் முதல் தேதிக்குள் டச்சுக்காரர்கள் தங்களுடைய அதிகாரம் முழுவதையும் இந்தோனேஷ்யர்களிடம் ஒப்புவித்துவிட வேண்டும் —இதுதான் மேற்படி ஆசியநாடுகளின் மகாநாட்டில் நிறைவேறிய முக்கிய தீர்மானம்.

அவ்வாறாக, ஐக்கிய நாடுகள் சபை செய்யத் தவறிய கடமையை இந்தியா முன் வந்து தலைமை வகித்துச் செய்யத் தொடங்கியது.

வல்லரசுகள் வாயளவில் கண்டிப்பதுடன் நின்றுவிடும் என்றும், எனவே, இந்தோனேஷ்யாவில் தங்களுடைய ஆதிக்கம் நிரந்தரமாக நிலைக்கும் என்றும் நினைத்து வந்த டச்சுக்காரர்களின் பேராசையை இந்தியா முதலிய ஆசிய நாடுகளின் உறுதியான நடவடிக்கைகள் தவிடு பொடியாக்கி விட்டன.

அவ்விஷயமாக ஆசிய நாடுகள் தகுந்த நடவடிக்கைகளைக் கைக்கொள்ள முற்பட்டதால், ஐக்கிய நாடுகள் சபையும் தன் மானத்தைக் காப்பாற்றிக் கொள்ளுவதற்காக ஏதாவது சமரசம் செய்ய வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது.

எனவே, டச்சுக்காரர்களுக்குத் தங்களுடைய விபரீதமான போக்கை மாற்றிக் கொள்வதைத் தவிர வேறு வழியில்லை.

ஏகாதிபத்திய வெறியின் உச்ச நிலையிலிருந்த டச்சுக்காரர்களின் தொனி சிறிது சிறிதாக இறங்கியது.

இந்தோனேஷ்யக் குடியரசுக் கட்சியினர் கலகக்காரர்கள் என்றும், அவர்கள் கொள்ளை, கொலைகள் புரிந்து வருகின்றனர் என்றும், அவர்களிடமிருந்து இந்தோனேஷ்யாவை ரட்சிப்பதற்காகவே தாங்கள் போர் தொடுத்திருப்பதாயும் சொல்லி வந்த டச்சுக்காரர்கள் இப்போது என்ன சொல்லுகிறார்கள் தெரியுமா?

"தேச பக்தி யற்ற கலகக்காரர்களிடமிருந்தும் கம்யூனிஸ்டுகளிடமிருந்தும் உங்கள் தேசத்தைப் பாதுகாக்கவே நாங்கள் போர் புரிந்தோம். எங்கள் கடமை அநேகமாகப் பூர்த்தியாகிவிட்டது. இனி உங்களுக்குப் பயமில்லை" என்று இந்தோனேஷ்யர்களுடன் சமரச ஒப்பந்தம் செய்துகொண்டிருக்கிறார்கள்!

அந்த ஒப்பந்தத்தை அனுசரித்து டச்சுத் துருப்புகள் இந்தோனேஷ்யக் குடியரசின் தலைநகரான ஜோக்ஜகர்த்தாவிலிருந்து வெளியேறி விட்டன.

இந்தோனேஷ்யத் தலைவர்களும் விடுதலையடைந்து விட்டார்கள்.

இவ்வாறாக, ஆசிய மகாநாட்டில் நிறைவேறிய தீர்மானத்தின் ஒரு பகுதி இப்போது காரியத்திலும் நிறைவேறி விட்டது.

டச்சுக்காரர்களின் சாம்ராஜ்ய வெறி வெற்றி பெறவில்லை!

• • •

ஆனால், அந்தத் தீர்மானத்தின் மற்றப் பகுதிகளும் கிரியாம்சையில் வந்தாலன்றி இந்தோனேஷ்யப் பிரச்னை தீருவதற்கு இடமில்லை. டச்சுக்காரர்களும் பெருமைப் படுவதற்கு இடம் இராமற் போகும்.

தற்போது ஏற்பட்டுள்ள ஒப்பந்தத்தின்படி நெதர்லண்ட்ஸில் ஒரு வட்ட மேஜை மகாநாடு நடக்கப் போகிறது. அதில் இந்தோனேஷ்யத் தலைவர்கள் கலந்துகொள்ள இசைந்திருக்கிறார்கள்.

இந்த வருஷம் முடிவதற்கு முன் இந்தோனேஷ்யர்களிடம் நிர்வாக அதிகாரம் முழுவதும் மாற்றப்படும் என்று, அதாவது இந்தோனேஷ்யர்கள் சுதந்திரம் பெற்றுவிடுவார்கள் என்று பத்திரிகைச் செய்திகள் கூறுகின்றன.

தலைநகரிலிருந்து டச்சுக்காரர்கள் வெளியேறி யிருப்பது அதற்கு முதற்படி என்றும் அவை குறிப்பிட்டிருக்கின்றன.

அது உண்மையாயின், ஆசிய நாடுகளிலுள்ள ஜனங்கள் மாத்திரமல்ல, சர்வதேச நீதியிலும் சமாதானத்திலும் சுதந்திர வாழ்விலும் நம்பிக்கை கொண்ட உலக மக்கள் யாவருமே மகிழ்ச்சி அடைவார்கள்.

ஏழு கோடி மக்கள் பாழும் அடிமை வாழ்விலிருந்து விடுதலை பெற்றுச் சுதந்திரம் அடைவது உலகமே குதூகலப்பட வேண்டிய விஷயம் அல்லவா?

# எஸ். எஸ். வாஸன்

தென்னட்டில் பிறந்து வளர்ந்து அகில இந்தியாவும் வியக்கும்படியாகக் காரியம் செய்து புகழ் பெற்ற பெருமை சிலருக்குத்தான் உண்டு. அத்தகைய பெருமையை இந்த வருஷத்தில் பெற்றவர் ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் அவர்கள்.

"சந்திரலேகா" என்னும் படத்தைத் தயாரிப்பதில் ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் சுமார் மூன்று வருஷத்துக்கு மேலே செலவிட்டார். அந்த மூன்று வருஷமும் ஏகாக்கிர சித்தத்துடன் மேற்படி படத் தயாரிப்பில் ஈடுபட்டிருந்தார். ஒரு படத்துக்காக இதுவரை இந்தியாவில் யாரும் செலவிடாத அளவு பணமும் செலவு செய்தார். அவருடைய நண்பர்களும் சரி, நண்பர்க ளல்லாதவர்களும் சரி, பலவிதமாகப் பேசிக் கொண்டார்கள். "ஒரு ஸினிமாப் படத்துக்கு இவ்வளவு காலமும் பணமும் செலவிடலாமா? அதிலும் ஒரு தமிழ்ப் படத்தில் இவர் இப்படிப் பணத்தை வாரிக் கொட்டிக் கொண்டிருக்கிறரே? என்ன ஆகுமோ? என்னமோ?" என்று சந்தேகப்பட்டார்கள்.

படம் வெளியானதும் எல்லாவித சந்தேகங்களும் தீர்ந்து போயின. குறை கண்டு பிடிக்கப் போனவர்கள்கூடப் படத்தின் மற்ற உயர்வுகளைப் பார்த்துப் பிரமித்துப் போய்ச் சிறிய குறைகளை மறந்து விட்டார்கள். படம் தமிழ் மக்களின் ஆதரவைக் கொள்ளை கொண்டது. படத்தைப் பார்த்தவர்களின் தொகையிலும் பண வசூலிலும் 'சந்திரலேகா'வுக்கு இணையான தமிழ்ப் படம் இதுவரை வெளி வந்ததில்லை என்று ஏற்பட்டது.

தமிழ்ப் படம் ஹிந்திப் படமாக உருவெடுத்த பிறகு அகில இந்தியாவிலும் திக்விஜயம் செய்து கொண்டு பரவிற்று. ஹிந்தி 'சந்திரலேகா'வின் அபரிமிதமான வெற்றியுடன் ஒப்பிடும்போது தமிழ்ப் படத்தின் வெற்றி சாதாரணம் என்று ஏற்பட்டது. ஸ்ரீ வாஸனின் விளம்பர ஆற்றலைக் கண்டே வட இந்தியப் பட முதலாளிகள் பிரமித்துப் போனர்கள். படத்தின் வெற்றியைப் பார்த்தபிறகு பலர் மூர்ச்சை யடைந்து விட்டார்கள். இதுவரையில் வடநாட்டில் எடுத்து வெளியான எந்த ஹிந்திப் படமும் 'சந்திரலேகா'வின் வெற்றிக்குப் பாதி அளவுக்குக் கூட வந்ததில்லையாம்! தென்னிந்தியாவில் உற்பத்தியான ஒரு படம் இந்த மாதிரி கன்னியா குமரியிலிருந்து காஷ்மீரம் வரையில் மகத்தான வெற்றி அடைந்து புகழ் பெற்றிருப்பது குறித்துத் தென்னிந்தியர்கள் அனைவரும் பெருமைப்பட வேண்டும்.

"கதை எழுதினலும் சரி, படம் எடுத்தாலும் சரி, அதில் ஏதேனும் ஒரு சிறந்த இலட்சியம் இருக்க வேண்டாமா? சந்திரலேகாவில் அம்மாதிரி இலட்சியம் இல்லையே?" என்று சிலர் குறைப்பட்டார்கள். ஆயினும், "சந்திரலேகா" படத்தில் ஓர் இலட்சியம் இருக்கத்தான் இருக்கிறது. ஆரம்ப முதல் இறுதி வரையில் அந்தத் தனி இலட்சியத்தை வைத்துக்கொண்டு படம் எடுக்கப்பட்டிருக்கிறது. "படம் பார்க்கும் ஜனங்களைக் குதூகலப்படுத்த வேண்டும்" என்பதுதான் அந்தத் தனிப் பெரும் இலட்சியமாகும். "சந்திரலேகா"வைப் பார்த்தவர்கள் மேற்படி இலட்சியம் அதில் பரிபூரணமாய் நிறைவேறியிருக்கிறது என்பதை அறிவார்கள்.

"சந்திரலேகா" படத்தில் இன்னெரு முக்கியமான விசேஷம் உண்டு. அந்தப் படத்தின் வெற்றியானது முழுக்க முழுக்க டைரக்டரின் வெற்றியாகும். மற்றப் படங்கள் நடிகர்களின் திறமையினலோ, கதை மகிமையினலோ, சங்கீதத்தின் உயர்வினலோ, சம்பாஷணைச் சுவையினலோ வெற்றி பெற்றிருக்கலாம். ஆனல் "சந்திரலேகா" வெற்றி இத்தகைய எந்த அம்சத்தினலும் ஏற்பட்டதல்ல. படத்தின் ஆரம்பத்திலிருந்து கடைசி வரையிலும் ஒவ்வொரு நிமிஷமும் டைரக்டரின் திறமை வெளியாகிச் சோபிப்பதைக் காண்கிறேம்.

"சந்திரலேகா"வின் டைரக்டர் ஸ்ரீ எஸ். எஸ். வாஸன்தான் என்பது அவருக்கு இருமடங்கு புகழ் தருவதாகும்.

• • •

அமெரிக்கா முதலிய பல மேல் நாடுகளுக்குச் சென்று இந்திய நடனக் கலையின் பெருமையை நிலைநாட்டிய ஸ்ரீ உதய சங்கர் உயர்தரமான நடனப் படம் ஒன்றை எடுக்க விரும்பினர். அந்தப் படம் மேனடுகளில் திரையிடப் படுவதற்குத் தகுந்ததா யிருக்க வேண்டும் என்பது அவருடைய விருப்பம். இந்த விருப்பத்தை நிறைவேற்றக்கூடிய வசதிகள் அமைந்த ஸ்டுடியோ ஒன்றை இந்தியா தேசம் முழுவதிலும் அவர் தேடி அலைந்தார். கடைசியாக, சென்னைக்கு வந்து ஜெமினி ஸ்டுடியோவைப் பார்த்தார். "இந்தியா தேசத்தில் தலைசிறந்த

ஸ்டுடியோ இதுதான்'' என்று நிர்மாணித்துத் தம்முடைய படத்தை இங்கேயே எடுக்கலானார். ஸ்ரீ உதயசங்கருடைய கருத்தை இன்று படத் தொழிலில் அநுபவம் உள்ள இன்னும் பலரும் ஒப்புக் கொள்கிறார்கள். ஜெமினி ஸ்டுடியோவைப்போல் பார்ப்பதற்கு அழகானதும், சுத்தமானதும், நவீன வசதிகள் அமைந்ததும், திறமையான சிப்பந்திகள் உள்ளதும், நன்றாக நிர்வகிக்கப்பட்டு வருவதுமான ஸ்டுடியோ இந்தியாவில் வேறு எங்கும் இல்லை என்று சொல்கிறார்கள்.

''ஆனந்த விகடன்'' பத்திரிகை தலை சிறந்து பிரபலமாகியிருந்த சமயத்தில் ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் ஸினிமாத் தொழிலில் கவனம் செலுத்தத் தொடங்கினார், நல்ல ஸினிமா எடுப்பதற்கு நல்ல ஸ்டுடியோ வேண்டும் என்று கண்டார். படத் தொழிலில் அநுபவம் சிறிதும் இல்லாத நிலைமையில் 'ஜெமினி ஸ்டுடியோ'வை ஸ்தாபித்தார். இன்று ஸ்ரீ எஸ். எஸ். வாஸனுடைய செயல் திறமைக்கு ஜெமினி ஸ்டுடியோ ஒரு சிறந்த எடுத்துக் காட்டாக விளங்குகிறது.

* * *

**ப**தினாலு வருஷத்துக்கு முன்பு பீஹார் பூகம்ப நிதிக்கு ஸ்ரீ வாஸன் இரண்டாயிரம் ரூபாய் நன்கொடை அளித்தது தென்னாட்டின் கவனத்தைக் கவர்ந்தது.

பிறகு, சென்னையின் பழைய காங்கிரஸ் மாளிகை எரிந்து போனபோது, ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் முதன் முதலில் ஆயிரம் ரூபாய் நன்கொடை அளித்துக் காங்கிரஸ் கட்டிட நிதியை ஆரம்பித்து வைத்தார்.

ஸ்ரீமதி கஸ்தூரிபாய் நிதிக்கு இருபத்தையாயிரம் ரூபாய் நன்கொடை அளித்து நாட்டைப் பிரமிக்கச் செய்தார்.

ஆனால் மகாத்மா காந்தி நிதிக்கு ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் ஒரு லட்சம் ரூபாய் நன்கொடை அளித்த செய்தி வந்தபோது அதைக் குறித்து யாரும் பிரமிப்பு அடையவில்லை. ''ஸ்ரீ வாஸன் செய்யக் கூடிய காரியந்தான்!'' என்றார்கள்.

இந்த நன்கொடைகள் எல்லாவற்றையும்விடத் திருவல்லிக்கேணி தேசியப் பெண் பாடசாலையில் தம்முடைய அருமை அன்னையின் பெயரால் பிரார்த்தனை மண்டபம் கட்டுவதற்கு ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் ரூ. 25,000 கொடுத்ததைப் பாராட்டி மகிழ்கிறோம். இத்தகைய அறிவின் ஆற்றலும் செயல் திறமையும் தாராள உள்ளமும் உடைய புதல்வரைப் பெற்று வளர்த்த அன்னையின் பெயர் விளங்க வேண்டியது அவசியமே அல்லவா? அதிலும், பெண் குழந்தைகள் படிக்கும் பள்ளிக்கூடத்தில் அந்த அம்மாளின் பெயர் நிலைபெற்று விளங்குவது மிகப் பொருத்தமான தன்றோ?




## இருபத்தாறும் அத்தியாயம்

# தந்தியின் மர்மம்

தாரிணியும் சூரியாவும் டில்லி டவுன் ஹாலுக்குப் பின்னால் உள்ள பூந்தோட்டத்துக்குச் சென்று அங்கே போட்டிருந்த சலவைக்கல் பெஞ்சி ஒன்றில் உட்கார்ந்து கொண்டார்கள்.

டவுன் ஹாலின் தீபாலங்கார ஒளி நிலா வெளிச்சத்தைப் போல் நாலாபுறமும் கவிந்து பரந்திருந்தது. நகரத்தின் பல பகுதிகளிலும் நடந்த சுதந்திரக் கொண்டாட்டங்களின் கோலாகல சத்தம் சிலசமயம் குறைவாகவும் சிலசமயம் அதிகமாகவும் கேட்டது.

அவர்கள் இருவரும் உட்கார்ந்திருந்த இடத்தை ஒட்டிச் சென்ற நடைபாதைகளில் குறுக்கும் நெடுக்கும் ஜனங்கள் கும்பல் கும்பலாகப் போய்க்கொண்டிருந்தார்கள். அவர்கள் குதூகலமாகப் பேசிக் கொண்டும் வாய்விட்டுச் சிரித்துக் கொண்டும் சென்றார்கள். அவர்களுடைய கவனமெல்லாம் அன்று நடந்த சுதந்திர விழா வைபவங்களிலேயே ஈடுபட்டிருந்தபடியால் சூரியாவும் தாரிணியும் அங்கே தனித்து உட்கார்ந்திருப்பதை அவர்களில் யாரும் திரும்பிப் பார்க்கக்கூட இல்லை.

சூரியா ஆர்வத்துடன் கூறினான் :—

"தாரிணி ! இங்கே அக்கம் பக்கத்தில் நம்முடைய பேச்சை ஒட்டுக் கேட்கக் கூடியவர்கள் யாரையும் காணோம். நாம் தாராளமாக மனம் விட்டுப் பேசலாம் அல்லவா? உண்மையில் நம்முடைய கலியாண விஷயத்தை ஆயிரம் பேருக்கு மத்தியில் சாட்சி வைத்துக் கொண்டு பேசி முடிவு செய்வதே விசேஷமாயிருக்கும் என்று நினைத்தேன். ஏனெனில் முன்னொரு சமயம் நாம் இப்படித்தான் தனிமையாக உட்கார்ந்து பேசினோம். இந்தியா சுதந்திரம் அடைந்ததும் நம்முடைய கலியாணத்தை முடித்துக் கொள்ளலாம் என்று தீர்மானித்தோம் !......".

தாரிணி குறுக்கிட்டு, "கொஞ்சம் தவறாகச் சொல்கிறீர்கள். இந்தியா சுதந்திரம் அடைந்ததும் நம்முடைய கலியாணத்தைப் பற்றி யோசிக்கலாம் என்று முடிவு செய்தோம்!" என்றாள்.

"அப்படியே இருக்கட்டும். இப்போது அதைப்பற்றி நாம் யோசிப்பதற்கு வேறு தடை ஏதாவது இருக்கிறதா?" என்று கேட்டான் சூரியா.

அந்தச் சமயத்தில் வெள்ளி வீதியிலிருந்து "மகாத்மா காந்திக்கு ஜே !"

"பண்டிட் மவுண்ட் பேட்டனுக்கு ஜே!" என்று ஜனங்கள் பலத்த குரலில் கோஷமிடும் சத்தம் கேட்டது.

"பார்த்தாயா, தாரிணி! இத்தனை ஜனங்கள் இந்தியா சுதந்திரம் அடைந்து விட்டது என்று நம்பிக் குதூகலப் படுகிறார்கள். உனக்கு மட்டும் நம்பிக்கை உண்டாகவில்லை!" என்று சூரியா சுட்டிக் காட்டினான்.

"எனக்கும் அந்த நம்பிக்கை இருக்கத்தான் இருக்கிறது. ஆனால் என் மனது மட்டும் எதனாலோ நிம்மதி அடையவில்லை. இந்தியாவுக்குச் சுதந்திரம் கொஞ்சம் சீக்கிரமாகவே வந்து விட்டது என்று தோன்றுகிறது."

"அப்படியானால் அது என்னுடைய தவறில்லை; காந்தி மகாத்மாவின் தவறு. அந்தத் தவறைத் திருத்துவதற்கு நான் ஒன்றும் செய்வதற்கில்லை! தாரிணி! நம்முடைய கலியாணத்துக்குத் தடையாக இருப்பது வேறு ஏதாவது உண்டா?" என்று சூரியா கேட்டான்.

"இன்னும் ஒரு தடை இருக்கிறது. என்னுடைய தாயார் தகப்பனாரைப் பற்றிய உண்மையைத் தெரிந்து கொள்வதற்கு முன்னால் நான் கல்யாணம் செய்து கொள்ள விரும்பவில்லை!" என்றாள் தாரிணி.

"இதுதான் போகாத ஊருக்கு வழி சொல்கிறது என்பது. உன் தாயார் தகப்பனார் யார் என்பதற்கும் நாம் கலியாணம் செய்து கொள்வதற்கும் என்ன சம்பந்தம் இருக்கமுடியும்?"

"என்னுடைய தாயார் தகப்பனார் யார் என்று தெரியாவிட்டால் எந்த மத சம்பிரதாயப்படி நாம் கலியாணம் செய்து கொள்வது?"

"இது என்ன, சீர்திருத்த ஆவேசமுள்ள புரட்சித் தலைவியான தாரிணி திடீரென்று வைதிகச் சம்பிரதாயத்தில் பற்றுக் கொண்ட அதிசயம்! குருட்டு நம்பிக்கைகளையும் அர்த்தமற்ற பழைய ஆசாரங்களையும் தகர்த்தெறிந்து காதல் தெய்வத்தின் சந்நிதியில் கலியாணம் செய்து கொள்வது என்று நாம் எத்தனையோ தடவை பேசி முடிவு செய்யவில்லையா?"

"பேசும்போது அதெல்லாம் சரியாகத் தோன்றியது. காரியத்தில் வரும்போது தயக்கமாயிருக்கிறது. சூரியா! என் பெற்றோர்கள் யார் என்று தெரியாதவரையில் என் மனம் நிம்மதி அடையாது. இதுவரையில் இந்தியா தேசத்தின் சுதந்திர இயக்கத்தில் கவனம் சென்று கொண்டிருந்தது. இனிமேல் அதுவும் இல்லை. என் தாய் தகப்பனார் யார் என்ற விசாரம் என் மனதை ஓயாமல் வாட்டிக் கொண்டிருக்கும். இந்த விசாரம் தீரும் வரை இல்வாழ்க்கையில் என்னால் உங்களுக்குச் சுகமும் நிம்மதியும் ஏற்படாது."

"அதைப்பற்றி எனக்குக் கவலையில்லை. நீ படுகிற விசாரத்தை நானும் பகிர்ந்துகொண்டு அநுபவிப்பேன். உன் காரணமாக எனக்கு ஏற்படுகிற கஷ்டம் எல்லாம் உண்மையில் சுகமென்றே தோன்றும். ஆனாலும் உன்னுடைய மன நிம்மதி மிகவும் முக்கியமானது என்பதை ஒப்புக் கொள்கிறேன். அதற்காக வேண்டிய பிரயத்தனம் செய்யத் தயாராயிருக்கிறேன். தாரிணி! உன்னுடைய பெற்றோர்கள் யார் என்பதைப் பற்றி உன் மனதில் எந்தவிதமான சந்தேகமோ, ஊகமோ தோன்றியதில்லையா?"

"தோன்றாமல் என்ன? பல தடவை தோன்றித்தானிருக்கிறது. ஆனால் ஒவ்வொரு தடவையும் என் ஊகம் பொய்யாய்ப் போயிருக்கிறது. முதலில் ரஸியா பேகத்தை என் தாயார் என்றும் சீதாவின் தகப்பனார்தான் எனக்கும் தகப்பனார் என்றும் எண்ணியிருந்தேன். அது பிசகு என்று ஏற்பட்டது. ரஸியா பேகம் உண்மைத் தாயார் அல்லவென்றும் வளர்ப்புத் தாயார் என்றும் வெளியாயிற்று. பிறகு என் உண்மைத் தாயார் யார் என்று கண்டு பிடிக்க முயன்றேன். ரஸியா பேகத்தின் சகோதரி கங்காபாய் என் தாயார் என்றும், அவள் அபாக்கியவதியாக அற்பாயுவில் இறந்தாள் என்றும் தெரிந்தது. அதற்குப் பிறகு என் தகப்பனார் யார் என்று கண்டுபிடிக்க முயன்று வருகிறேன். இன்று வரை அது தெரிந்தபாடில்லை."

"தாரிணி! நிச்சயமாக நீ ரஜனிபூர் ராஜாவின் புதல்வி அல்லவா?"

"நான் எப்படிச் சொல்ல முடியும்? ரஜனிபூர் பெரிய ராணி நான் ராஜகுமாரிதான் என்று சொல்லுகிறாள். முதலில் அதை மறுதளித்த ரஸியா பேகமும் இப்போது அதுதான் உண்மையென்று சொல்லுகிறாள்.

காலஞ்சென்ற ராஜாவின் சொந்த சொத்தில் நான் டங்கு கேட்க வேண்டும் என்றுகூட ரஸியா பேகம் விரும்புகிருள். ஆனால் என் மனதிற்குள் மட்டும் ஏதோ ஒன்று நிச்சயமாகச் சொல்லிக் கொண்டிருக்கிறது; நான் ஒரு சுதேச ராஜாவின் குமாரியாக இருக்க முடியாது என்று."

"தாரிணி! என் மனதிலிருந்து ஒரு பெரிய பாரம் இறங்கியது போலிருக்கிறது. உன் உள் உணர்ச்சி எப்போதும் சரியாயிருப்பது வழக்கம். இது விஷயத்திலும் அது சரியாகத்தானிருக்க வேண்டும்."

"ஆனாலும் அது உண்மை என்பதை நிச்சயப்படுத்திக் கொள்ள விரும்புகிறேன். சூரியா! சில சமயம் ஒரு விசித்திரமான எண்ணம் என் மனதில் உண்டாகிறது. சீதாவை நான் என்று எண்ணிக் கொண்டு ரஜனிபூர் ஆட்கள் பிடித்துக் கொண்டு போனார்கள் அல்லவா? இது ஏன் என்று சில சமயம் நான் சிந்தனை செய்வதுண்டு. நீங்கள் போலீஸ் பாதுகாப்பிலிருந்து தப்பித்துக் கொண்டு போனபிறகு நான் சீதாவின் கதியை அறிந்து கொள்வதற்காக ரஜனிபூருக்குப் போனேன். ராஜமாதாவும் ராஜகுமாரரும் வற்புறுத்தியதன் பேரில் சில நாள் அங்கேயே தங்கியிருந்தேன். அப்போது அவர்கள் பல தடவை சீதாவின் முக ஜாடை என் முக ஜாடையைப் போல் இருந்ததாகவும் அதனால்தான் அந்தப் பிசகு நேர்ந்ததாகவும் சொன்னார்கள். இது உண்மையா? அப்படியானால் இதன் காரணம் என்னவாயிருக்கக் கூடும்? உங்களால் ஊகித்துச் சொல்ல முடியுமா?" என்று தாரிணி கேட்டாள்.

சூரியா சிந்தனையில் ஆழ்ந்தான். ரஜனிபூர் ஆட்கள் அத்தகைய தவறு ஏன் செய்தார்கள்? ஒரு வேளை அவர்கள் செய்த தவறில் தாரிணியின் பிறப்பைக் குறித்த இரகசியம் இருக்குமோ? அது என்னவாயிருக்கக் கூடும்?—சூரியாவுக்கு விளங்கவில்லை.

"எனக்கு அத்தகைய காரணம் ஒன்றும் தோன்றவில்லை. இந்தப் புதிரை அவிழ்க்கக் கூடியவர்கள் வேறு யாருமே இல்லையா, தாரிணி!"

"இல்லாமல் என்ன? ரஸியா பேகத்துக்கும் மௌல்வி சாகிபுவுக்கும் அது நிச்சயம் தெரியும். ஒரு நாளைக்கு அவர்கள் இருவரும் வாக்குவாதம் செய்து கொண்டிருந்தது என் காதில் விழுந்தது. மௌல்வி சாகிபு என்னிடம் உண்மையைச் சொல்லிவிட வேண்டும் என்று வற்புறுத்தினார். ரஸியா பேகம் கூடாது என்று சொன்னாள். இருவருக்கும் இது விஷயமாகப் பெரிய சண்டையே நடந்தது. அது ஒன்றும் என் காதில் விழாததுபோல் நான் நடந்து கொண்டேன். ஏனெனில் வற்புறுத்திக் கேட்டால் உண்மை வெளிவராது என்பது நிச்சயம். அவர்களாகச் சொல்லட்டும் அல்லது சந்தர்ப்பம் பார்த்துக் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம் என்று இருக்கிறேன்."

"மௌல்வி சாகிபு என்று யாரைச் சொல்லுகிருய்? ஜும்மா மசூதிக்கு எதிரில் நீ சில காலம் வசித்த சந்து வீட்டில் ஒருவர் குர் ஆன் வாசித்துக் கொண்டிருந்தாரே? அவரையா?"

"ஆமாம், சூரியா! அவரைத்தான் சொல்கிறேன்."

"அவர் யார், தாரிணி! அந்த மௌல்வி சாகிபு யார்?"

"இது என்ன கேள்வி? மௌல்வி சாகிபு ரஸியா பேகத்தின் கணவர்."

"அது தெரியும். மௌல்வி சாகிபு ரஸியா பேகத்தின் கணவராவதற்கு முன்னால் அவருடைய பெயர் என்ன என்று கேட்டேன்."

தாரிணி சிறிது நேரம் யோசனை செய்துவிட்டுக் கூறினாள்:— "உங்களுக்கு அது தெரிந்திருக்க வேண்டியது தான். நீங்களே ஊகித்துத் தெரிந்து கொண்டிருப்பீர்கள் என்று நினைத்தேன். அதை மறைத்து வைப்பதில் இனி உபயோகமும் இல்லை. சூரியா! அந்த மௌல்வி சாகிபு சீதாவின் தகப்பனார் துரைசாமி ஐயர் தான்!"

சூரியா மௌனமாக இருந்தான். தாரிணி கூறியதை அவன் மனம் ஜீரணம் செய்து கொண்டிருந்தது.

"என்ன? ஒரே ஆச்சரியக் கடலில் மூழ்கி விட்டீர்கள் போலக் காணப்படுகிறதே!" என்றாள் தாரிணி.

"அப்படி ஒன்றும் இல்லை. சில விஷயங்களை ஞாபகப்படுத்திக் கொண்டேன். சீதா தன்னை ஆக்ரா கோர்ட்டில் ஒரு முஸ்லிம் வந்து சாட்சி கூறிக் காப்பாற்றியதாகச் சொன்னாள்.

எனக்கு உடனே உங்கள் வீட்டில் பார்த்த மௌல்வியின் ஞாபகம் வந்தது. இரண்டையும் இரண்டையும் கூட்டி நாலு என்று ஊகம் செய்து கொண்டேன். தாரிணி! அந்த மௌல்வி சாகிபுவை நான் உடனே பார்க்க விரும்புகிறேன்."

"எதற்காக? அவரிடம் சண்டை பிடிப்பதற்காகவா?"

"ஆமாம்."

"ரஸியா பேகத்தைக் கலியாணம் செய்துகொண்டதற்காகவா? அல்லது அவர் ஹிந்து மதத்துக்குத் துரோகம் செய்ததற்காகவா?"

"அதற்கெல்லாம் இல்லை. அவர் எங்களையெல்லாம் மறந்து விட்டிருப்பதற்காக. ஒரு முக்கிய விஷயம் அவரைக் கேட்டு நான் தெரிந்து கொள்ள வேண்டும். சீதாவின் கலியாணத்தன்று அவர் 'கலியாணத்தை நிறுத்தவும்' என்று தந்தி கொடுத்திருந்தார். அதன் காரணத்தை இன்னொரு சமயம் சொல்கிறேன் என்றார். பிறகு அவரைக் கேட்பதற்குச் சந்தர்ப்பம் ஏற்படவேயில்லை. தாரிணி! இப்போது உடனே போய் நான் அவரைப் பார்த்தாக வேண்டும்."

"அது முடியாத காரியம். மௌல்வி சாகிபும் ரஸியாபேகமும் கொஞ்ச நாளாக இந்த ஊரில் இல்லை. போகிற இடமும் என்னிடம் சொல்லவில்லை. ஆனால் அந்தத் தந்தியின் காரணத்தை நானே சொல்லிவிடக்கூடும், சூரியா! கஷ்டமான விஷயந்தான்; ஆனாலும் சொல்லிவிடுகிறேன். அந்தச் சமயம் வரையில் உங்கள் மாமாவை நான் என் தகப்பனார் என்றும் ரஸியா பேகத்தைத் தாயார் என்றும் எண்ணிக் கொண்டிருந்தேன். சௌந்தர ராகவனுக்கும் எனக்கும் இருந்த நட்பைக் குறித்து ஏற்கெனவே சொல்லியிருக்கிறேன் அல்லவா? அந்த நட்பில் ஏமாற்றமும் வெறுப்பும் அடைந்து பீஹார் பூகம்ப விபத்தில் சேவை செய்வதற்காக நான் புறப்பட்டுப் போனேன். அதே சமயத்தில் ரஸியா பேகம் ரஜனிபூர் ராஜாவைக் குத்த முயன்று சிறை சென்றாள். இந்தச் செய்தியை எனக்குக் கூறி ஆறுதல் சொல்வதற்காகத் துரைசாமி ஐயர் என்னைத் தேடிக்கொண்டு வந்தார். செய்தியைச் சொல்லிவிட்டு எனக்கு ஆறுதலாக ரஸியாபேகம் உண்மையில் என் தாய் அல்ல என்றும் சொன்னார். கலியாணம் செய்து கொண்டு சுகமாய் வாழும்படி எனக்குப் போதித்தார். அப்போதுதான் நான் வரித்திருந்த புருஷனுக்கே சீதாவை மணம் செய்யப் பேசியிருக்கிறார்கள் என்று அவருக்குத் தெரிந்தது. பாவம்! என்னிடம் அவருக்கு ரொம்பவும் அபிமானம் உண்டு. ஆகையினாலேதான் 'கலியாணத்தை நிறுத்திவிடவும்' என்று அவர் உங்களுக்குத் தந்தி கொடுத்தார். அவ்விதம் அவர் தந்தி கொடுத்தது அப்போது எனக்குத் தெரியாது. வெகு காலத்துக்குப் பிற்பாடுதான் தெரியவந்தது."

"தாரிணி! அந்தத் தந்தியின் மர்மம் இன்னதென்பது வெகு காலமாக என் உள்ளத்தை வருத்தி வந்தது. அதை இன்று வெளியிட்டதற்காக வந்தனம். அந்தத் தந்தி விஷயமாக நான் மிக்க மூடத்தனமாக நடந்து கொண்டேன். அதை யாரிடமும் காட்டாமல் மறைத்து வைத்தேன்; தந்தியில் கண்டிருந்தபடி கலியாணத்தை மட்டும் நிறுத்தி விட்டிருந்தால்?......அடாடா! சீதாவின் வாழ்க்கை இவ்வளவு துன்பமயமாகியிராதல்லவா? நாம் நல்லது என்று நினைத்துக் கொண்டு செய்கிற காரியம் சில சமயம் எவ்வளவு கெடுதலாய் முடிந்து விடுகிறது!"

"நல்ல எண்ணத்துடன் செய்கிற காரியம் ஒருநாளும் கெடுதலாய் முடியாது. இப்போது சீதாவும் சௌந்தரராகவனும் எவ்வளவு சந்தோஷமாய் இருக்கிறார்கள் என்பதை நீங்கள் பார்த்தால் பரவசமடைவீர்கள்."

"அவர்கள் சந்தோஷமாயிருப்பதும் இல்லாததும் உனக்கு எப்படித் தெரியும், தாரிணி! நேரில் பார்த்ததைப் போலச் சொல்லுகிறாயே?"

"ஆமாம்; பஞ்சாப்புக்குப் போய் நேரில் அவர்களைப் பார்த்தபடியினால்தான் சொல்லுகிறேன்."

"ஆகா! அது எப்போது? பஞ்சாப்புக்கு எப்போது போயிருந்தாய்? சீதா நிஜமாகவே சந்தோஷமாக இருக்கிறாளா?" என்று சூரியா அடங்காத ஆர்வத்துடன் கேட்டான்.

"அத்தங்காளைப் பற்றிச் சொன்னதும் இவனுக்கு வருகிற ஆத்திரத்தைப் பார்!" என்றாள் தாரிணி.

"என்னைவிடச் சீதாவின் விஷயத்தில் உனக்கு அக்கரை அதிகமாயிருப்பது நன்றாய்த் தெரிகிறதே? நான் போய் அவர்களைப் பார்க்கவில்லையே? நீதானே பார்த்திருக்கிறாய்? இத்தனைக்கும் நாம் அவர்களுடைய வாழ்க்கையில் தலையிடுவதனால் அவர்களுக்குத் தொல்லைதான் ஏற்படுகிறது என்று நாம் இருவரும் சேர்ந்து தீர்மானம் செய்திருந்தோமே!......"

"சீதாவின் விஷயத்தில் எனக்கு ஏன் இத்தனை பாசம் என்பது எனக்கே விளங்கவில்லைதான்......"

"தாரிணி! நிஜமாக சீதாவின்மேல் உள்ள பாசத்தினாலேதான் நீ பஞ்சாப்புக்குப் போனாயா?......"

"இல்லை! பஞ்சாப்புக்குப் புறப்பட்டபோது அவர்களைப் பார்க்கும் உத்தேசமே எனக்கில்லை. இந்த வருஷ ஆரம்பத்தில் மறுபடியும் என்னுடைய சரித்திர ஆராய்ச்சி வேலையை நான் ஆரம்பித்தேன். ராவல்பிண்டிக்கு அருகிலுள்ள தட்சசீலத்துக்கு நானும் என் தோழி நிர்மலாவும் போனோம். அங்கே நாங்கள் பார்த்த அற்புதங்களைப் பற்றி ஒரு புத்தகமே எழுத வேண்டும். திரும்பி வரும்போது சீதா வசிக்கும் ஹோஷங்காபாத் வழியாக வரவேண்டியிருந்தது. இறங்கி அவளைப் பார்க்காமல் வருவதற்கு என் மனம் கேட்கவில்லை. இறங்கியது நல்லதாய்ப் போயிற்று. சீதாவும் சௌந்தரராகவனும் குழந்தை வஸந்தியும் எவ்வளவு சந்தோஷமாயிருக்கிறார்கள் தெரியுமா? வஸந்தியின் கன்னங்கள் காஷ்மீர் ரோஜாப்புஷ்பங்களைப்போல் இருக்கின்றன. அந்தக் குழந்தையின் முகம் என் மனதை விட்டுப் போகவேயில்லை. சீதாவும் உடம்பு நன்றாய்த்தேறியிருக்கிறாள்..."

"சௌந்தரராகவனும் நன்றாய்த்தானிருக்கிறார்! போன வருஷம் இந்த நாளில் அவர் யமலோகத்தை எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தார் என்று காட்டுவதற்கு யாதொரு அடையாளமும் இல்லை!" என்று சூரியா சொன்னதும் தாரிணி வியப்படைந்தாள்.

"நீங்கள் அவரைச் சமீபத்தில் பார்த்தீர்களா, என்ன? எப்போது? எங்கே?" என்று பரபரப்புடன் கேட்டாள்.

"சௌந்தரராகவன் பெயரைச் சொன்னதும் வருகிற ஆத்திரத்தைப் பார்!" என்றான் சூரியா.

"எங்கள் பழைய சரித்திரத்தை நானும் மறந்துவிட்டேன். அவரும் அடியோடு மறந்துவிட்டார். சீதாவுங்கூட மறந்துவிட்டாள். நீங்கள் மட்டும் மறக்கவில்லை போலிருக்கிறது!" என்றாள் தாரிணி.

"மன்னிக்க வேண்டும். நானும் அந்தப் பழைய கதையையெல்லாம் மறந்துதான் இருந்தேன். ஆனால் இன்று காலையில் ராகவனைப் பார்த்தபடியால் பழைய கதை நினைவு வந்தது......"

இத்தனை நேரமும் உட்கார்ந்திருந்த தாரிணி சட்டென்று எழுந்து நின்றாள்.

"இன்று காலையில் பார்த்தீர்கள் என்றால் இந்த டில்லியில்தான் பார்த்திருக்க வேண்டும். அவரை மட்டுமா? சீதாவும் கூட இருந்தாளா?"

"அவரை மட்டுந்தான் பார்த்தேன். சீதாவை அழைத்து வரவில்லையாம். உத்தியோக சபலம் அவரை மறுபடியும் பிடித்துக் கொண்டிருக்கிறது. இப்போதுதான் புது டில்லியில் சுதந்திர அரசாங்கம் ஏற்படப் போகிறதே, தம்முடைய உத்தியோகத்தைத் திருப்பிக் கொடுக்க மாட்டார்களா என்று பார்ப்பதற்காக வந்தாராம். டில்லிக்கு வந்து ஒரு வாரம் ஆயிற்றாம்."

"ஐயோ! இது என்ன விபரீதம்? இரண்டு நாளாக அடிக்கடி எனக்குச் சீதாவின் ஞாபகம் வந்து கொண்டிருந்தது. ஏதோ மனம் கவலைப்பட்டுக் கொண்டிருந்தது. அதன் காரணம் இப்போதுதான் தெரிகிறது. சூரியா! சௌந்தரராகவன் எங்கே தங்கியிருக்கிறார்? அவரை நான் உடனே பார்க்க வேண்டும்" என்றாள் தாரிணி.

"அவரை உடனே பார்க்கமுடியாது. இன்று காலையிலேயே அவர் கல்கத்தாவுக்கு ரயில் ஏறிவிட்டார். அவருடைய உத்தியோக சம்பந்தமான பழைய ரிகார்டுகள் கல்கத்தாவில் தங்கிவிட்டனவாம். அவற்றை எடுத்து வருவதற்காகப் போகிறாராம். தமக்கு மறுபடி உத்தியோகம் வந்துவிடும் என்றும் டில்லிக்கே திரும்பி வந்துவிடப் போவதாகவும் எக்களிப்புடன் சொன்னார். நீ ஏன் இவ்வளவு பதட்டமடைய வேண்டும், தாரிணி!"

"ஏன் என்று எனக்கே தெரியவில்லை. சூரியா! என்னுடைய உள் உணர்ச்சியில் உங்களுக்கு நம்பிக்கை உண்டு என்று சொன்னீர்கள். சீதாவுக்கு ஏதோ ஆபத்து வரப்போகிறது என்று என் உள் உணர்ச்சி சொல்லுகிறது. அவளைக் காப்பாற்றுவதற்கு நாம் உடனே கிளம்பியாகவேண்டும்."

"இது என்ன பைத்தியம்?"

"எனக்குப் பைத்தியம் இல்லை. ராவல்பிண்டி கலவரத்தின் போது நான் பஞ்சாப்பில் இருந்தேன். அந்தப் பயங்கரங்களைப் பற்றி இப்போது நினைத்தாலும் குலை நடுங்குகிறது. ராவல்பிண்டியைப் போல ஆயிரம் ராவல்பிண்டிகள் பஞ்சாப் முழுதும் நடக்கலாம் என்று அங்கிருந்து வந்தவர்கள் சொல்கிறார்கள். நம்முடைய கட்சியைச் சேர்ந்த சிநேகிதர்கள் பலர் பஞ்சாப்பில் இருக்க விரும்பாமல் இங்கே வந்துவிட்டார்கள்."

"அப்படியிருந்தால் சௌந்தரராகவனுக்குத் தெரிந்திராதா? அவர் ஏன் சீதாவை விட்டுவிட்டு வருகிறார்?"

"எனக்குப் பைத்தியம் என்று சொன்னீர்கள் அல்லவா? பைத்தியம் எனக்கில்லை; அவருக்குத்தான். பஞ்சாப் சீக்கியர்களை யாரும் எதுவும் செய்ய முடியாது என்று அவர் ஒரே திட நம்பிக்கையில் இருக்கிறார். அதனாலேயே சீக்கியர்கள் வசிக்கும் பகுதியில் அவர் வீடு எடுத்துக்கொண்டு வசிக்கிறார். ஆனால் அவருடைய நம்பிக்கை பைத்தியக்கார நம்பிக்கை. சூரியா! நீங்கள் என்னுடன் வரப் போகிறீர்களா? இல்லையா? வரா விட்டால் நான் தனியாகவே போகப் போகிறேன். ஆம்; ஒருவேளை நீங்கள் இங்கே இருப்பதே நலமாயிருக்கும்."

"ஒருநாளும் இல்லை, தாரிணி! உன்னுடன் நரகத்துக்கு வேண்டுமானாலும் வரத் தயார் என்று பலதடவை நான் சொல்லியதுண்டு. அவசியமானால் அதைக் கட்டாயம் நிறைவேற்றுவேன். ஆனாலும் இது அவசியமா, உசிதமா என்று மறுபடியும் யோசிக்க வேண்டும். நாம் சீதாவின் விஷயத்தில் தலையிட்டபோதெல்லாம் அவளுக்குக் கஷ்டந்தான் நேர்ந்திருக்கிறது......"

"அதற்கெல்லாம் பிராயச்சித்தம் செய்யும்படியான சந்தர்ப்பம் இப்போது ஒருவேளை ஏற்படுமோ, என்னமோ? யார் கண்டது?" என்று சொல்லிக் கொண்டே தாரிணி விரைவாக நடக்கத் தொடங்கினாள். சூரியா அவளைத்தொடர்ந்து சென்றான்.

## இருபத்தேழாம் அத்தியாயம்

# இருளில் ஒரு குரல்

நள்ளிரவு நெருங்கிக் கொண்டிருந்தது. கடிகாரத்தின் முட்கள் பன்னிரண்டு எண்ணிக்கையைச் சமீபித்துக் கொண்டிருந்தன. சீதா கையில் 'டிரிப்யூன்' பத்திரிகை வைத்திருந்தாள். கொஞ்சம் அதில் படிப்பதும் பிறகு ஏதோ யோசிப்பதும் கடிகாரத்தைப் பார்ப்பதும் மறுபடி படிப்பதுமாயிருந்தாள். தூக்கம் வராத இரவுகளில் சீதா ஏதாவது புத்தகமோ பத்திரிகையோ படிப்பது வழக்கம். சிறிது நேரத்துக்கெல்லாம் தூக்கம் வந்து விடும். ஆனால் அன்றைக்கு வெகு நேரம் படித்தும் தூக்கம் வரவில்லை. பல காரணங்களால் அவளுடைய மனம் ஏற்கெனவே கலக்க முற்றிருந்தது. பத்திரிகையில் படித்த செய்திகள் அந்தக் கலக்கத்தை அதிகப்படுத்தின.

ஹொஷங்காபாத் நகரத்தின் கோடியில் அது ஒரு தனி வீடு. சுற்றிலும் சிறு தோட்டமும் காம்பவுண்டு சுவரும் இருந்தன. வீட்டின் மச்சு அறையில் சீதா தன்னந் தனியாக இருந்தாள். இல்லை,—'தன்னந்தனியாக' என்று சொல்லுவது தவறு. பக்கத்துக் கட்டிலில் குழந்தை வஸந்தி படுத்துத் தூங்கினாள். ஆனால் குழந்தை வஸந்தியைத் துணை என்று சொல்ல முடியாதல்லவா? சீக்கியக் காவற்காரன் தினம் தினம் இராத்திரி எட்டு மணிக்கு வீட்டுக்குப் போய்ச் சாப்பிட்டு விட்டு ஒன்பது ஒன்பதரை மணிக்குள் திரும்பி வந்து விடுவது வழக்கம். அன்றைக்கு எதனாலோ அவன் திரும்பி வரவில்லை. இந்தப் பத்திரிகையில் வந்திருக்கும் செய்தி

களுக்கும் அவன் வராததற்கும் ஏதாவது சம்பந்தம் இருக்குமோ? அப்படி என்ன இருக்கப்போகிறது?

பக்கத்துக் கட்டிலில் படுத்திருந்த வஸந்தியின் மீது சீதாவின் பார்வை சென்றது. குழந்தையின் கன்னங்கள் உப்பி இரண்டு அழகிய ஆப்பிள் பழங்களைப் போலக் காணப்பட்டன. மூடிய கண்களுடன் தூங்கிய குழந்தையின் முகத்தில் களை சொட்டிற்று. பஞ்சாப்புக்கு வந்த பிறகு குழந்தைக்கு உடம்பு நன்றாய் ஆகியிருக்கிறது. ஒரு வருஷத்தில் எவ்வளவு நல்ல வளர்த்தி! நம்முடைய ஊர்ப் பக்கமா யிருந்தால், குழந்தைக்கு இப்போது மேலாக்குப் போட வேண்டும் அல்லது சித்தாடை உடுத்த வேண்டும் என்பார்கள். ஆனால் இந்தப் பக்கத்திலேதான் பெரிய பெரிய ஸ்திரீகள் எல்லாரும் கால் சட்டையும் மேல் சட்டையும் அணிந்து கொண்டு ஒரு அங்க வஸ்திரத்தையும் தரித்துக் கொண்டு வெளியில் புறப்பட்டு விடுகிறார்களே? இங்கே தேச ஆசாரம் அப்படி! குழந்தைக்கு மேலாக்கு, சித்தாடை வாங்குவது பற்றி என்ன கவலை?

சுவரிலே மாட்டியிருந்த வஸந்தியின் போட்டோ படத்தைச் சீதா பார்த்தாள். பஞ்சாபிப் பெண்களைப்போல் கால் சட்டை, மேல் சட்டை, அங்க வஸ்திரத்துடன் விளங்கிய வஸந்தியின் படம் அது. அப்படி ஒன்றும் விகாரமா யில்லை. குழந்தைக்கு அழகாய்த்தா னிருக்கிறது. ஆனால் சில வருஷம் போன பிறகு நன்றாயிருக்குமா? அது எப்படி இருக்கும்? ஒரு வேளை இந்தப் பக்கத்திலேயே நாம் நெடு நாள் இருந்துவிட்டால் வஸந்தி வயதான பின்னரும் இப்படித்தான் உடை தரிப்பாளோ, என்னமோ?

இந்த ஊரிலேயே இருப்பதற்கு ஆட்சேபம் என்ன? ஒன்றுமே யில்லை. பஞ்சாப்பைப் போன்ற தேசமே கிடையாது. எந்த விதத்தில் பார்த்தாலும் சரிதான். கள்ளிச் சொட்டைப்போல கனமான பால் ரூபாய்க்கு இரண்டரைப் படி. ஆப்பிளும் ஆரஞ்சும் திராட்சையும் வாதாமியும் கொள்ளை கொள்ளையாய்க் கிடைக்கின்றன. மற்ற சாமான்களும் அப்படித்தான். ஏன் எல்லாருக்கும் உடம்பு நன்றாய் ஆகாது? இந்த தேசத்து ஜனங்கள் எல்லாரும் நல்ல ஆஜானுபாகுவாக வளர்ந்திருப்பதற்குக் கேட்பானேன்?

ஆகா! இந்தப் பக்கத்து இயற்கை அழகைத்தான் என்னவென்று சொல்ல? ஏதோ நம்முடைய பக்கங்களிலும் 'வஸந்த காலம்' என்று சொல்கிறார்கள். அங்கே யெல்லாம் வஸந்த காலத்தைக் கண்டது யார்? புத்தகங்களிலே படிப்பதுதான்! இங்கேயோ சரியாகப் பிப்ரவரி மாதம் 15உ வஸந்த காலம் பிறப்பதைக் கண்ணாலே காணலாம். முதல் நாள் வரையில் மரங்கள் எல்லாம் மொட்டை மொட்டையாய் நிற்கும். பிப்ரவரி 15உ யன்று பார்த்தால் மரங்களில் எல்லாம் சின்னஞ் சிறு சிவந்த மொட்டுக்களைக் காணலாம். முதலில் மொட்டுக்கள் மலரும்; பிறகு இலைகள் தளிர்க்கும். பிப்ரவரி 14உ வரையில் வாசற்பக்கமெல்லாம் வெறுங் கட்டாந் தரையாகக் காணப்படும். சரியாக 15உ யன்று எங்கே பார்த்தாலும் தரையில் சிறு சிறு மஞ்சள் பூக்கள் பூத்துக் குலுங்கும். பூமாதேவி திடீரென்று குதூகலித்துச் சிரிப்பது போன்ற அக் காட்சியை எப்படி வர்ணிப்பது? இவ்வளவு அழகான நாட்டைவிட்டு ஏன் போகவேண்டும்?

கோடை காலத்தில் இங்கே வெயில் என்னமோ கடுமைதான்; சந்தேகம் இல்லை. ஆனால் பக்கத்தில் காஷ்மீர் இருக்கிறது; சிம்லா இருக்கிறது; இன்னும் பல மலை வாசங்களும் இருக்கின்றன. மே, ஜூன் மாதங்களில் மலைக்குப் போய்விட்டு வந்தால் மற்ற மாதங்களைப் பற்றிக் கவலையே இல்லை.

பஞ்சாப்புக்கு வந்த பிறகு, ஏறக்குறைய இந்தப் பத்து மாத காலமும் சீதாவின் வாழ்க்கை ஒரே ஆனந்த மயமாக இருந்தது. வம்பு இல்லை, தும்பு இல்லை, அசூயை இல்லை, ஆத்திரம் இல்லை, பொறாமை இல்லை, புழுங்குவதும் இல்லை, சிநேகிதர்கள் இல்லை, விரோதி இல்லை. தான் உண்டு, தன் கணவனின் அன்பு உண்டு, தன் குழந்தையின் மழலை உண்டு. வேறு என்ன வேண்டும் இந்த உலகத்தில்?

இத்தகைய ஆனந்த மயமான வாழ்வு இன்னும் எத்தனை காலம் நிலைத்து நிற்குமோ தெரியவில்லையே? மறு

படியும் அந்தப் பாழும் டில்லிக்குப் போகவேண்டி வருமோ, என்னமோ, தெரியவில்லையே? இவருக்கு என்னத் துக்காகத் திடீரென்று சர்க்கார் உத்தி யோக மோகம் மறுபடியும் பிடித்துக் கொண்டது? என்ன இருந்தாலும் புருஷர்களுடைய போக்கே விசித்திர மானதுதான். வீட்டில் அமைதியும் இன்பமும் குடிகொண்டிருந்தால் அவர் களுக்குப் போதுவதில்லை. கூட்டமும் கூச்சலும் அதிகாரமும் ஆர்ப்பாட்ட மும் தடபுடலும் இருந்தால்தான் புருஷர்களுக்கு வாழ்க்கை ரஸிக்கும் போலும். விருந்துகள், பார்ட்டிகள், விருந்துகள் இல்லாமல் அவர்களால் அதிக காலம் உற்சாகமாக இருக்க முடி யாது போலும்! இல்லாமற் போனால், பஞ்சாப்புக்கு வந்த புதிதில் இருந்த உற்சாகம் அவருக்கு இப்போது ஏன் இல்லாமற் போயிற்று? சிரிப்பும் குதூ கலமும் களிப்பும் விளையாட்டும் ஏன் வர வரக் குறைந்து போய்விட்டன?

பத்து நாளைக்கு முன்புதான் திடீ ரென்று அவர் இந்த வெடிகுண்டைத் தூக்கிப் போட்டார். "சீதா! ஆகஸ்டு மாதம் 15-ந் தேதி இந்தியாவுக்குச் சுதந்திரம் வரப்போகிறது. நம்முடைய சொந்த சர்க்கார் ஏற்படப்போகிறது. புரட்சி இயக்கத்தைச் சேர்ந்தவர்க ளுக்கு நான் வீட்டில் இடம் கொடுத் தேன் என்பதற்காகத்தானே எனக்கு உத்தியோகம் போயிற்று? போன உத்தியோகம் ஆகஸ்டு 15உ எனக்குத் திரும்பி வந்துவிடும்!" என்றார்.

"அப்படியானால் இந்த ஊரைவிட்டு டில்லிக்குப் போக வேண்டி யிருக் குமோ?" என்று சீதா கேட்டாள். அவளுடைய குரலில் தொனித்த கவலை யைத் தெரிந்துகொண்டு ராகவன், "டில்லிக்குப் போய்த்தான் தீர வேண்



டும் என்று அவசியம் இல்லை." இஷ்டமிருந்தால் டில்லிக்குப் போகலாம். இஷ்டம் இல்லாவிட்டால் பாகிஸ்தானுக்கு 'ஆப்ட்' செய்துகொண்டு பஞ்சாப்பிலேயே உத்தியோகம் பார்க்கலாம். சீதா ! உன்னிடம் உண்மையைச் சொல்லி விடுகிறேனே ! என்னதான் இருந்தாலும் சர்க்கார் உத்தியோகத்தைப் போல் கம்பெனி உத்தியோகம் ஆகாது. ஆயிரம் ரூபாய் சம்பளம் குறைவாயிருந்தாலும் சரி, சர்க்கார் உத்தியோகத்தின் மவுஸே வேறுதான் !" என்றான் சௌந்தரராகவன்.

இதற்குப் பிறகு சீதா ஆட்சேபம் எதுவும் சொல்ல விரும்பவில்லை. "அதற்கென்ன சந்தேகம்? சர்க்கார் உத்தியோகம் திரும்பி வந்தால் அதை வேண்டாம் என்று யாராவது சொல்வார்களா?" என்றாள்.

"ஆனால் சர்க்கார் உத்தியோகம் நம்மைத் தேடிக்கொண்டு வராது. நாம்தான் அதைத் தேடிக்கொண்டு போகவேண்டும். டில்லிக்குப் போய் அதற்காகக் கொஞ்சம் வேலை செய்தாகவேண்டும். உடனே புறப்பட்டுப் போனால்தான் கைகூடும். திரும்பிவரப் பத்துப் பதினைந்து நாள் பிடிக்கலாம். நீ இங்கேயே இருக்கிறாயா, சீதா? அல்லது என்கூட நீயும் வருகிறாயா?" என்று கேட்டான் ராகவன்.

"நான் உங்களுடன் வந்தால் உங்களுக்கு இடைஞ்சலாக இருக்குமா?" என்று சீதா கேட்டாள்.

"அப்படிப் பிரமாத இடைஞ்சலாயிராது. கொஞ்சம் இடைஞ்சலாயிருந்தாலும் பொறுத்துக்கொள்ள வேண்டியதுதான் !" என்றான் ராகவன்.

இதன் பிறகு சீதா டில்லிக்கு ராகவனுடன் போகும் எண்ணத்தை விட்டு விட்டாள். அடிக்கடி ராகவன் வெளியூர்களுக்குக் கம்பெனி காரியமாகப் போவதுண்டு. அதுபோல் இப்போதும் போய்விட்டு வருகிறார். தான் எதற்காகப் பரபரப்பு அடையவேண்டும்? டில்லிக்குத் தானும் போனால் அதிக நாள் அங்கே தங்கும்படி நேர்ந்தாலும் நேர்ந்து விடும். அவர் மட்டும் தனியாகப் போனால் சீக்கிரம் திரும்பி வந்து விடுவார் !—இவ்விதம் மனதைச் சமாதானப்படுத்திக் கொண்டு ராகவனுக்கு விடை கொடுத்து அனுப்பினாள்.

ராகவன் போய் இரண்டு நாளைக்குப் பிறகு சிறிதும் எதிர்பாராத விதமாகப் பாமா என்பவள் வந்து சேர்ந்தாள். முன்னொரு காலத்தில் அவள் பேரில் சீதாவுக்கு ரொம்பவும் கோபம் இருந்தது. ஆனால் இப்போது சீதாவின் மனதில் கோபத்துக்கோ ஆங்காரத்துக்கோ அசூயைக்கோ சிறிதும் இடம் இருக்கவில்லை. அப்படி எப்போதேனும் சிறிது ஆங்காரம் தோன்றினாலும் தேவபட்டணத்திலிருந்து தான் நள்ளிரவில் புறப்பட்ட அன்று காந்தி மகாத்மாவின் படத்தின் முன்னிலையில் செய்த பிரதிக்ஞையை நினைவுபடுத்திக் கொள்வாள். உடனே ஆங்காரம் அடங்கிச் சாந்தம் குடிகொள்ளும். எனவே, பாமாவைச் சீதா அன்புடன் வரவேற்றாள். அவளுடைய குணமும் இப்போது நல்ல விதத்தில் மாறியிருந்தது கண்டு மகிழ்ந்தாள். ராகவன்



டில்லிக்குப் போக நேர்ந்தது பற்றி இன்னொரு காரணத்தைப் பாமாவிட மிருந்து சீதா அறிந்தாள். ராகவன் எந்தக் கம்பெனியில் உத்தியோகம் பார்த்தானே அந்தக் கம்பெனியார் பஞ்சாப்பில் தங்களுடைய கடையைக் கட்டுவதற்கு ஏற்பாடு செய்து கொண்டிருந்தார்களாம். பஞ்சாப் பாகிஸ்தானில் சேரப்போவதுதான் அதற்குக் காரணமாம். ஆகையால் "இனி பஞ்சாப்பில் உனக்கு வேலை இல்லை! மதராஸுக்குப் போகிறாயா?" என்று ராகவனைக் கேட்டிருந்தார்களாம். இதனால் வெறுப்படைந்துதான் ராகவன் திரும்பவும் சர்க்கார் உத்தியோகத்தைத் தேடிப் போயிருக்க வேண்டும் என்று பாமா சொன்னாள். லாகூரில் கம்பெனியின் காரியங்களை முடிவு செய்வதற்காகப் பாமாவின் தகப்பனார் லாகூருக்கு வந்திருந்தாராம். அவருடன் வந்திருந்த பாமா, ராகவன் என்ன செய்யப்போகிறார் என்று தெரிந்து கொண்டு போவதற்காக ஹொஷங்கா பாக்குக்கு வந்தாளாம்.

இதையெல்லாம் கேட்ட சீதாவுக்குக் கொஞ்சம் மனக் கலக்கம் அதிகமாயிற்று. பஞ்சாப் பாகிஸ்தானில் சேர்வதற்காகக் கம்பெனியை எதற்காக மூடவேண்டும் என்பது அவளுக்குப் புரியவில்லை. ஆனால் ராகவன் மதராஸுக்குப் போக விரும்பாதது இயற்கைதான் என்பதை உணர்ந்திருந்தாள். ஆகையால் டில்லியிலேயே உத்தியோகம் பார்க்கவேண்டியிருந்தாலும் தான் தடை சொல்லுவதில்லை யென்று எண்ணிக் கொண்டாள்.

பாமா மேலும் நாலைந்து நாள் சீதாவுடன் அங்கே இருந்தாள். பஞ்சாப்பின் நிலைமையைப் பற்றி ஏதேதோ பயங்கரமான விஷயங்களைக் கூறினாள். அந்த நிலைமையில் ராகவன் சீதாவைத் தனியாக விட்டுவிட்டுப் போனது பற்றிக் குறை கூறினாள். தன்னுடன் வந்து விடும்படி சீதாவுக்கு யோசனை சொன்னாள். சீதா அதை மறுக்கவே, "அப்படியானால் நானும் உன்னுடன் இருக்கிறேன்!" என்றாள். ஆனால் ஆகஸ்டு 12உ யன்று, "அப்பா என்னைப் பற்றிக் கவலைப் படுவார். நான் இனி இருக்க முடியாது" என்று சொல்லிவிட்டுக் கிளம்பிவிட்டாள்.

பாமா போன பிறகு சீதா தன்னுடைய தனிமையை அதிகமாக உணர ஆரம்பித்தாள். மனதில் கலக்கம் மணிக்கு மணி அதிகமாகிக் கொண்டு வந்தது. ஆயினும் தைரியத்தை அடியோடு இழந்து விடவில்லை. "உலகத்தில் பார்க்க வேண்டிய பயங்கரங்களையெல்லாம் பார்த்தாகிவிட்டது. அநுபவிக்கவேண்டிய கஷ்டங்களையெல்லாம் அநுபவித்தாகிவிட்டது. புதிதாக இனிமேல் எனக்கு என்ன கஷ்டம் வந்துவிடப் போகிறது?" என்று அடிக்கடி எண்ணி மனதைத் திடப்படுத்திக் கொண்டாள்.

பாமா சென்று இன்றைக்கு நாலு தினம் ஆகிவிட்டது. ராகவனிடமிருந்தோ கடிதம் ஒன்றும் வரவில்லை. ஏன் பிடிவாதம் பிடித்து ராகவனுடன் தானும் போகவில்லை யென்று தோன்றியது. பாமாவை வற்புறுத்தித் தன்னுடன் இருக்கும்படிச் சொல்லாமற் போனதும் பிசகுதான். பத்திரிகையிலே போட்டிருக்கும் செய்திகளையெல்லாம் பார்த்தால் கொஞ்சம் பயமாய்த்தானிருக்கிறது! எங்கே, எப்போது, என்ன நடக்கும் என்று சொல்வதற்கில்லையாமே? பஞ்சாப் முழுவதிலும் எரிமலை குமுறிக் கொண்டிருக்கிறதாமே? இப்படியெல்லாம் பத்திரிகையில் வளைத்து வளைத்து எழுதியிருப்பதின் அர்த்தந்தான் என்ன?

**வி**ளக்கை அணைத்துவிட்டுச் சீதா படுத்துக் கொண்டாள். கடிகாரத்தில் மணி பன்னிரண்டு அடித்தது. பன்னிரண்டாவது தடவை மணி அடித்ததும் நிசப்தம் குடிகொண்டது. ஒரு நிமிஷ நேரத்துக்குத்தான். அப்புறம் எங்கேயோ வெகு தூரத்தில் ஏதோ ஒரு சத்தம் கேட்டது. வர வர அது பெருகிக் கொண்டும் அருகில் நெருங்கிக் கொண்டும் வந்தது. சமுத்திரத்தில் அடிக்கும் அலைகளின் ஓசைமாதிரி இருந்தது. சீ சீ! இது என்ன பிரமை? அந்தப் பழைய உபத்திரவம் மறுபடியும் திரும்பி வருகிறது போலிருக்கிறதே! ஐந்தாறு மாதமாகவே இவ்விதம் அடிக்கடி காதில் ஏதோ அலை ஓசை மாதிரி கேட்கிறது. ஆரம்பிக்கும்போது மெதுவாயிருக்கிறது; வர வரச் சத்தம் அதிகமாகிறது. காதில் ஏதோ கோளாறு என்று ராகவன் சொன்னது சரியாகத்தான் இருக்க வேண்டும்! அடுத்த தடவை லாகூருக்குப் போகும்போது நல்ல காது வைத்தி

யரைக் கொண்டு பரிசோதித்துப் பார்க்க வேண்டும். இருக்கிற இடைஞ்சல் எல்லாம் போதாது என்று காது வேறே செவிடாகித் தொலைந்து விட்டால் என்னத்தைச் செய்கிறது?

காதிலே கேட்ட அலை ஓசை வர வர அதிகமாகி வரவே அந்தப் பிரமையைப் போக்கிக் கொள்வதற்காகப் படுக்கையிலிருந்து எழுந்தாள். அவள் படுத்திருந்த மச்சு ஹாலின் ஒரு பக்கத்துக்குப் போய் அங்கிருந்த ஜன்னல் வழியாக வெளியிலே பார்த்தாள்.

இராத்திரியில் எந்த நேரத்திலும் ஹொஷங்காபாத் நகரத்தில் மின்சார விளக்குகள் எரிந்து கொண்டிருப்பது வழக்கம். ஆனால் இன்றைக்கு ஒரு விளக்கையும் காணோமே? இது என்ன அதிசயம்! ஒருவேளை 'கரண்ட்' தடைப்பட்டு விட்டதா என்ன? ஆனால் இந்த வீட்டில் விளக்கு 12 மணி வரையில் எரிந்ததே? அப்புறம் கரண்ட் நின்று போயிருக்குமோ? ஸ்விட்சைப் போட்டுப் பார்க்கலாமா?

எங்கேயோ ஒரு விஸில் அடிக்கும் சத்தம் கேட்டது. அதற்குப் பதிலாக இன்னொரு விஸில் சத்தம் கேட்டது. நாய் ஒன்று ஊளையிட்டது. 'தம்' 'தம்' என்று எங்கேயோ ஒரு முரசு பயங்கரத் தொனி செய்தது.

சீதாவுக்கு உடம்பு சிலிர்த்தது. சீ! இது என்ன பைத்தியக்காரப் பயம்? போலீஸார் விஸில் ஊதினால் அது ஒரு ஆச்சரியமா? நாய் ஊளையிடாமல் வேறு என்ன செய்யும்? எங்கேயோ சீக்கியரின் குருத்வாரத்தில் முரசு முழங்குகிறது. இன்று ஏதாவது உத்சவமாயிருக்கலாம். இதற்காக நாம் ஏன் பயப்பட வேண்டும்?

திடீரென்று அர்த்தமில்லாத ஒரு புது பயங்கரமான எண்ணம் சீதாவின் மனதில் தோன்றியது. இரண்டு கண்கள் தன்னை உற்று நோக்கிக் கொண்டிருந்தன. அவை எங்கிருந்து பார்க்கின்றன என்று தெரியவில்லை. அறைக்குள்ளிருந்தா, வெளியிலிருந்தா என்றும் தெரியவில்லை. மனிதருடைய கண்ணா, காட்டு மிருகத்தினுடைய கண்ணா, கோட்டானுடைய கண்ணா, கொள்ளிவாய்ப் பிசாசின் கண்ணா என்றும் தெரியவில்லை. ஒரு சமயம் அந்தக் கண்கள் பின்னாலிருந்து பார்ப்பதுபோலிருந்தது. இன்னொரு சமயம் அந்தக் கண்கள் பக்கவாட்டிலிருந்து பார்ப்பதாகத் தோன்றியது. ஜன்னலுக்கு எதிரே கொஞ்ச தூரத்தில் ஒரு மரம் இருந்தது. இருட்டில் அந்த மரம் நெடிதுயர்ந்த ஒரு கரிய பூதம் எனக் காணப்பட்டது. அதிலிருந்து இரண்டு கண்கள் சீதாவை உற்று நோக்கின. முதலில் சாதாரணக் கண்களாகத் தோன்றியவை பிறகு நெருப்புத் தணலைப்போல் பிரகாசித்தன.

சீதா தலையை ஒரு ஆட்டம் ஆட்டி அந்த மரத்திலிருந்து பார்வையைத் திருப்பி அடுத்த வீட்டின் பக்கம் நோக்கினாள். அடுத்த வீட்டுக் கூரை மேலிருந்து இரண்டு கண்கள் அவளை நோக்கின. வெளியிலிருந்து தன் பார்வையைத் திருப்பி அறைக்குள்ளே செலுத்தினாள். அறையின் சுவரிலிருந்து அவளை இரு கண்கள் நோக்கின. மறுபடியும் வெளியில் பார்த்தாள். வீட்டைச் சுற்றிலுமிருந்து நூற்றுக்கணக்கான கண்களின் ஜோடிகள் அக்னிமயமாக ஜொலித்துக் கொண்டு அவளை உற்று நோக்கின.

"நம்முடைய மூளை குழம்பி வருகிறது; சீக்கிரத்தில் பைத்தியம் பிடித்துவிடுமோ, என்னமோ! அவர் எப்போது வருவாரோ, தெரியவில்லையே! அவர் வரும் வரையிலாவது நாம் பைத்தியமாகாமல் இருக்கவேண்டுமே!" என்று எண்ணிக்கொண்டே ஜன்னல் பக்கமிருந்து திரும்பிவந்து படுக்கையில் படுத்துக் கொண்டாள். தலையணைக்கு அப்பால் கையினால் துளாவினாள். டார்ச் லைட்டும், ரிவால்வரும் கையில் தட்டுப் பட்டன. "இருங்கள் ஜாக்கிரதையாக!" என்று மனதிற்குள் சொல்லிக் கொண்டாள். ராகவன் இந்தப் பத்து மாத காலமாகத் தினந்தோறும் டார்ச் விளக்கும் கைத்துப்பாக்கியும் பக்கத்தில் வைத்துக்கொண்டுதான் படுப்பது வழக்கம். தான் வெளியில் போகும்போது சீதாவும் அந்தமாதிரியே செய்யவேண்டும் என்று சொல்லியிருந்தான். சீதா அந்தக் கட்டளையை நிறைவேற்றிவந்தாள். ஆனால் கைத் துப்பாக்கியினால் தனக்கு என்ன பிரயோஜனம்? கைத் துப்பாக்கியினால் மூளை குழம்பாமல் தடுத்துக்கொள்ள முடியுமா? தற்கொலை வேண்டுமானால் செய்து கொள்ளலாம். அப்படித் தற்கொலை செய்துகொண்டு

தான் இறந்துபோவதில் என்ன பயன்? குழந்தை வஸந்தியின் கதி என்ன ஆவது? முன்னொரு தடவை இதே மாதிரி துப்பாக்கியால் சுட்டுக்கொண்டு சாகும் எண்ணம் தனக்கு உதித்திருந்ததும் அதைச் சூரியா வந்து தடுத்ததும் சீதாவுக்கு நினைவு வந்தது. சூரியா இப்போது எங்கே என்ன செய்து கொண்டிருக்கிறானோ? அவனுக்கும் தாரிணிக்கும் கலியாணம் எப்போது நடக்கும்? தனக்கு அழைப்பு வருமா?......

ஆஹா! இது என்ன சத்தம்? வீட்டுக்குப் பக்கத்திலுள்ள மரத்தில் கரகர வென்று சத்தம் கேட்கிறது. யாரோ மரத்தில் ஏறும் சத்தந்தான்; சந்தேகமில்லை, அது யாராயிருக்கும்? திருடனா? கொலைகாரனா? அல்லது ஒருவேளை காவல்காரச் சீக்கியனா? காவல்காரன் வாசலில் வந்து படுத்துக் கொள்ளாமல் மரத்தின்மேல் எதற்காக ஏறி வருகிறான்!

மரத்தில் ஏறியவன் யாராயிருந்தாலும் அவன் மாடி வராந்தாவில் குதித்துவிட்டான்! குதித்த சத்தம் நன்றாய்க் கேட்டது. அடுத்தபடி என்ன செய்வான்? ஹாலுக்குள் எப்படி அவன் நுழைந்து வருவான்?

வராந்தா ஜன்னலுக்குப் பக்கத்தில் ஒரு நிழல் தோன்றியது. ஒரு கரிய பயங்கர உருவம் நின்றது. அந்த உருவத்தின் அங்க அடையாளம் ஒன்றும் தெளிவாகத் தெரியவில்லை.

ஆகா! ஸ்திரீகள் புருஷர்களைப் பிரிந்து தனியாக இருக்கிறதென்பது எவ்வளவு அபாயகரமான விஷயம்? இந்தத் தடவை பிழைத்தால் இனி இத்தகைய பிசகை என்றைக்கும் செய்யக் கூடாது! ஆனால் இன்றைக்குத் தப்பிப் பிழைப்பது எப்படி?

சீதாவின் நெஞ்சு அடித்துக் கொண்ட வேகத்தைச் சொல்ல முடியாது. காதில் அலை ஓசை கேட்பது நின்று தன்னுடைய இருதய அடிப்பின் ஓசை கேட்கலாயிற்று. கடிகாரத்தின் டிக், டிக்கோடு இருதயத்தின் அடிப்பும் துடிப்பும் சேர்ந்து கொண்டன. அவளுடைய உடம்பு வியர்த்து, கால் முதல் தலை வரையில் நடுநடுங்கிற்று.

நடுங்கிய கையினால் துளாவிச் சீதா கைத்துப்பாக்கியை எடுத்துக் கொண்டாள். துப்பாக்கியைத் தொட்டதும் கை நடுக்கமும் நின்றது. ஒரே விநாடி, ரிவால்வரை ஜன்னல் பக்கம் குறி பார்த்துச் சுடவேண்டியதுதான்; வந்திருப்பவன் செத்து விழுவான்!

ஆனால் அந்தச் சமயத்தில், சீதா ரிவால்வரைக் கையில் பற்றிக்கொண்ட அடுத்த நிமிஷத்தில், அவள் மனக் கண்ணின் முன்னால் காந்தி மகாத்மாவின் திரு உருவம் தோன்றியது. சுவரில் மாட்டிய படத்திலிருந்து அவர் திருமுகம் தனியாக வெளிக் கிளம்பிக் கருணை ததும்பும் கண்களால் சீதாவைப் பார்ப்பது போல இருந்தது. "சீதா! இதை நான் ஒப்பவில்லை. இது ஜீவ ஹிம்சை! சுடாதே! உன்னால் உயிரை வாங்க முடியும்; உயிரைக் கொடுக்கமுடியுமா?" என்று மகாத்மாவின் கருணைக் கண்கள் கேட்டன.

"இவன் எதற்காக வந்திருக்கிறானோ என்னமோ? ஒருவேளை ஏழைப்பட்ட மனிதனாயிருக்கலாம். சாப்பாட்டுக்கு இல்லாமல் வயிற்றுப் பசியின் கொடுமை காரணமாகத் திருட வந்திருக்கலாம். பாவம்! அவனை ஏன் கொல்ல வேண்டும்? ஜீன் வால்ஜீன் கதையில் என்ன வருகிறது? திருடனைக் காட்டிக் கொடுக்காமல் காப்பாற்றுகிறாரே, அந்த பிஷப்! நாம் மட்டும் எதற்காக இந்தப் பாதகத்தைச் செய்ய வேண்டும்? எப்படியும் ஜன்னல் வழியாக அவன் உள்ளே நுழைந்து வர முடியாது. அவன் என்னதான் செய்யப்போகிறான், பார்க்கலாமே?

இவ்வளவு எண்ணங்களும் ஒரே நிமிஷ நேரத்துக்குள் சீதாவின் மனதில் குமுறிப் பாய்ந்தன. அந்தக் குமுறலுக்கு மத்தியில் சீதாவின் காதில் ஒரு குரல் கேட்டது.

"சீதா! சீதா! எழுந்திரு! சத்தம் போடாமல் எழுந்திரு!" என்று அந்தக் குரல் சொல்லிற்று.

ஆகா! அது யாருடைய குரல்! அந்தக் குரலைக் கேட்டதும் உடம்பு ஏன் இப்படிச் சிலிர்க்கிறது? இருளில் வந்த அந்தக் குரல் யாருடையது?

ரிவால்வரை வைத்துவிட்டு, டார்ச் லைட்டை எடுத்துச் சீதா ஸ்விட்சை அமுக்கினாள். ஜன்னலுக்கு வெளியே வராந்தாவில் நின்ற உருவத்தின்மீது அதன் வெளிச்சம் விழுந்தது!

# ஆற்றைத் தேக்குவோம்! சாகரம் ஆக்குவோம்!

ரா. கி.

மேட்டுப்பாளையம் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து பவானி அணைக்கட்டு வேலை நடக்கும் இடம் இருபத்தைந்து மைல் தூரம் இருக்கிறது. அங்கே போய்ச் சேர இன்னும் ஐந்தாறு மைல் தூரம் இருக்கும்போதே சீப் என்ஜினியர் வெங்கடாச்சாரியார் "பவானிசாகரம் இது வரையில் வந்து எட்டும்" என்று சொன்னார். நான் வியப்படைந்து "பவானி சாகரமா? அது என்ன?" என்று கேட்டேன். "அணைக்கட்டுக் கட்டியானதும் ஏற்படப்போகும் நீர்த் தேக்கத்துக்குப் பவானி சாகரம் என்று பெயர் வைக்கப் போகிறோம்" என்று பதில் கிடைத்தது.

கோயமுத்தூரிலிருந்து "இண்டியன் எக்ஸ்பிரஸ்"—"தினமணி" "நவ இந்தியா" பத்திரிகைகளின் நிருபர்கள் மராமத்து மந்திரியுடன் அணைக்கட்டு வேலையைப் பார்க்க வந்திருந்தார்கள். "பவானி சாகரம்" என்ற பெயரை அவர்கள் அடிக்கடி சொல்லிப் பார்த்துக் கொண்டார்கள். அதில் அவர்களுக்கு அவ்வளவு சந்தோஷம். சாதாரணமாய், கோயமுத்தூர் ஜில்லாக்காரர்கள் தஞ்சாவூர் ஜில்லாக்காரர்களைப் பார்த்து "உங்கள் ஜில்லாவில் மலையே கிடையாதே! எங்கள் ஜில்லாவில் பெரிய பெரிய மலைகள் உண்டு!" என்று பெருமை அடித்துக்கொள்வார்கள். இதற்குப் பதிலாகத் தஞ்சாவூர்க்காரர்கள் "எங்கள் ஜில்லாவில் சமுத்திரம் இருக்கிறதே: உங்கள் ஜில்லாவில் சமுத்திரமே இல்லையே!" என்று சொல்லுவதுண்டு.

ஆனால் இனிமேல் கோயமுத்தூர்க்காரர்களுக்குச் சமுத்திரம் இல்லாத குறையும் தீர்ந்து போய்விடும் என்று காண்கிறது! அவர்களுடைய ஜில்லாவில் "பவானி சாகரம்" ஏற்படப்போகிறதல்லவா? தஞ்சாவூர் ஜில்லாவில் கல்லணை புகழ்பெற்று விளங்குவது போல் கோயமுத்தூர் ஜில்லாவுக்குப் பவானி சாகரம் அருமையான காட்சியாய் விளங்கும் என்பதில் சந்தேகமில்லை!

"பவானி சாகரம் இவ்வளவு தூரம் பரவி நிற்கும் என்றால் அதற்கேற்ப அணை ரொம்பப் பெரிதாக இருக்கவேண்டுமே?" என்று கேட்டேன். "ஆமாம்; பெரிய அணைதான். கட்டி முடியும்போது அதன் நீளம் ஐந்தரை மைல் இருக்கும்" என்று சீப் என்ஜினியர் கூறினார். "அணை எப்போது கட்டி முடியும் என்று எதிர்பார்க்கிறீர்கள்?" எனக் கேட்டேன். இந்தக் கேள்விக்கு ஸ்ரீ வெங்கடாச்சாரியார் கூறிய பதில் என்னை ஆச்சரிய சாகரத்தில் தூக்கிப் போட்டுவிட்டது.

"1953-ம் வருஷத்தில் முடிந்துவிடும் என்று திட்டம் போட்டிருக்கிறது. திட்டத்தில் கண்டதைக் காட்டிலும் ஒரு வருஷம் முன்னதாகவே வேலை முடிந்தாலும் முடிந்து விடலாம்!" என்றார்.

சாதாரணமாக, திட்டத்தில் குறிப்பிட்டதைக் காட்டிலும் அதிக காலம் ஆவதுதான் சர்க்கார் செய்யும் வேலைகளின் வழக்கம். இந்த அணைக்கட்டு அந்த மாமூலுக்கு விரோதமாக ஒரு வருஷம் முன்னதாகவே ஆகிவிடும் என்று சொன்னால், ஆச்சரியப்படாமல் வேறு என்ன செய்வது?

அந்த ஆச்சரியம் தீர்வதற்குள்ளே 'பவானி நகர்' என்னும் புதிய பட்டணத்தை நெருங்கி விட்டோம். ஒழுங்காகப் பிளான் செய்து போட்ட சாலைகளும் சாலைகளின் இரு புறத்திலும் வரிசை வரிசையாக வீடுகளும் தென்பட்டன. அணைக்கட்டில் வேலை செய்யும் சிப்பந்திகள் குடியிருப்பதற்காகக் கட்டிக் கொடுக்கப்பட்ட வீடுகள் அவை என்று அறிந்தோம். ஒவ்வொரு வரிசையிலும் இருந்த வீடுகள் அச்சில் வைத்து வார்த்ததுபோல் இருந்தன. ஆனால் வரிசைக்கு வரிசை உத்தியோகத்தின் தரத்துக்கேற்ப அளவிலும் செலவிலும் கொஞ்சம் வித்தியாசப்பட்டது. ஸூபர்வைஸர்கள், பெரிய குமாஸ்தாக்கள், சிறிய குமாஸ்தாக்கள், மேஸ்திரிகள் முதலியவர்களின் வீடுகள் மூவாயிரம் ரூபாயிலிருந்து ஐயாயிரம் ரூபாய்க்குள்ளே கட்டப்பட்டிருந்தன. சென்னை, திருச்சி, மதுரை முதலிய நகரங்களில் வேலை பார்க்கும் சாதாரண உத்தியோகஸ்தர்களுக்கு இந்தமாதிரி வீடு குடியிருக்கக் கிடைத்தால் மோட்சமே கிடைத்து விட்டதாகச் சந்தோஷப்படுவார்கள்.

தொழிலாளர் வீடுகள் ஐந்நூறு ரூபாய்ச் செலவில் கட்டப்பட்டிருந்தன. எனினும் கச்சிதமாகவும் வசதியாகவும் இருந்தன.

குமாஸ்தாக்கள், மேஸ்திரிகள், தொழிலாளிகள் எல்லாருடைய வீடுகளுக்கும் 'பிளஷ் - அவுட்' என்று சொல்லப்படும் சுகாதார வசதிகள் அமைத்திருப்பதை முக்கியமாகக் குறிப்பிட வேண்டும். சென்னையில் உள்ளது போல் பூமிக்குள் குடைந்து அமைத்த சாக்கடை இங்கே கிடையாது. ஆயினும் நவீன சுகாதார முறையில் பூமிக்குள்ளே பெரிய தொட்டிகள் கட்டிக் கூழாங்கற்களைப் போட்டு 'பிளஷ் - அவுட்' அமைத்திருக்கிறார்கள். இதனால் அசுத்தங்கள் காற்றைக் கெடுக்கும் நிலைமை இல்லாமற் போகிறது. தேசம் பூராவும் பட்டணங்களிலிருந்து கிராமங்கள் வரையில் மாளிகையிலிருந்து குடிசைகள் வரையில் இத்தகைய சுகாதார வசதிகள் ஏற்பட வேண்டியது அவசியமாகும். அப்படி ஏற்படும்போது தோட்டித் தொழிலுக்கு என்று ஆட்கள் வேண்டியதில்லை. நாட்டில் பரவியுள்ள நோய் நொடிகளில் 100க்கு 50 விதம் மாயமாக மறைந்து விடக் கூடும்.

* * *

நூற்றுக் கணக்கான வீடுகள், புழுதியில்லாத நேர் நேரான சாலைகள், தபால் ஆபீஸ், தந்தி ஆபீஸ், பெட்ரோல் பங்க், பள்ளிக்கூடம், ஹோட்டல், சில்லறைக் கடைகள், சுகாதார வசதிகள், குடி தண்ணீர் வசதிகள் — ஆகிய இவ்வளவும் சென்ற ஒன்பது மாதத்துக்குள் இங்கே உண்டாகியிருக்கின்றன என்பதை அறிந்தோம். ஒரு வருஷத்துக்கு முன்னால் கனம் பக்தவத்ஸலம் இவ்விடம் வந்திருந்தபோது ஒரே ஒரு ஓலைக் குடிசை மட்டும் இருந்ததாம்! இப்போது ஒரு சின்னஞ் சிறு பட்டணமே முளைத்து எழுந்திருக்கிறது! — இந்த அதிசயத்தைப் பற்றி என்னுடைய வியப்பைத் தெரிவித்து, "இது எப்படிச் சாத்தியமாயிற்று!" என்று விசாரித்தேன். குறைந்த செலவில் துரிதமாக வீடு கட்டும் வேலை நடப்பதற்கு இங்கே கையாண்ட முறைகளை எக்ஸிகியூடிவ் என்ஜினியர் ஸ்ரீ சீனிவாசன் எடுத்துச் சொன்னார்.

ஸ்ரீ ஏ. சீனிவாசன் ஏற்கனவே காவேரியில் ஜேடர்பாளையம் 'கலுங்கு' வேலை நடத்தி அநுபவம் பெற்றவராம். அந்த வேலையைக் கண்டிராக்டர்களுடைய உதவியில்லாமல் சொந்த மேற்பார்வையில் குறைந்த செலவில் செய்து முடித்துப் பெயர் வாங்கினராம். அவர்தான் இப்போது பவானி அணைக்கட்டு வேலையை ஸ்தலத்தில் இருந்து கவனித்து வருகிறார். இங்கேயும் கண்டிராக்டர்களை எதிர்பாராமல் உத்தியோகஸ்தர்களின் நேர் மேற்பார்வையிலேயே பெரும்பாலும் வேலை நடந்து வருகிறது என்று தெரிந்தது.

வீடுகளின் சுவர்கள் எழுப்புவதற்கு ஒரு புதிய முறை இங்கே கையாளப் படுகிறது. எட்டு அங்குலம் கனமுள்ள பெரிய பெரிய கற்களை அடுக்கிச் சுவர் கட்டுகிறார்கள். இந்தக் கற்கள் செங்கல்லும் அல்ல; கருங்கல்லும் அல்ல. ஏழு பங்கு மண்ணும் ஒரு பங்கு செமண்டும் கலந்து செய்த புதுவிதக் கற்கள். இவற்றைக் காளவாயில் வைத்து வேக வைப்பதில்லை. பார்ப்பதற்குப் பச்சை வெட்டுக் கல் மாதிரி இருக்கும். ஆனால் நல்ல உறுதி உள்ளவை. சுவரின் மேலே மெல்லிய செமண்ட் பூச்சுப் பூசிவிட்டால் இன்னும் அதிக உறுதி பெற்றுவிடும். இந்த வகை மண் - செமண்ட் கலப்புக் கற்களைச் சீக்கிரம் செய்துவிடலாம்; துரிதமாக அடுக்கிச் சுவர் வைத்துவிடலாம். ஆனால் எவ்வளவு அதிக மண்ணில் எவ்வளவு குறைந்த செமண்ட் கலந்தால் எவ்வளவு காலம் உழுதியா யிருக்கும் என்ற ஆராய்ச்சிகளை என்ஜினியர்கள் பல வருஷம் நடத்திய நிலையிலேயே இந்த முறை சாத்தியமாகியிருக்கிறது.

ஜன்னல்கள் — கதவுகளுக்கு முழுதும மரம் வேண்டும் என்று எதிர்பார்த்தால் காரியம் இலேசில் நடைபெறாது. ஆகையால் மரச் சட்டங்களைப் போலவே செமண்டுகளினால் சட்டங்களைச் செய்து ஜன்னல்களுக்கும் கதவு நிலைகளுக்கும் உபயோகப்



பவானி அணைக்கட்டில் வேலை செய்யும் சிப்பந்திகளுக்காக இம்மாதிரி நூற்றுக்கணக்கான வீடுகள் சிக்கன முறையில் கட்டியிருக்கிறார்கள்.

படுத்தியிருக்கிறார்கள். செமண்டைக் கொண்டு ஜன்னல் சட்டங்களைச் செய்தல், செமண்டினால் 'பிளஷ்-அவுட் சாதனங்களை அமைத்தல் முதலிய வேலைகள் எல்லாம் இங்கேயே என்ஜினியர்களின் மேற்பார்வையில் நடைபெறுகின்றன. இம்மாதிரி நவீன முறைகள் பலவற்றைக் கையாண்டதினால் தான் இவ்வளவு சீக்கிரத்தில் இத்தனை வீடுகளைக் கட்டி முடிப்பது சாத்தியமாயிற்றாம்.



பிரபல 'விஸிடர்'கள் வந்தால் தங்குவதற்காகக் கட்டியிருக்கும் பவானி ஹவுஸ்

இந்தப் பட்டணத்தை நிர்மாணிப்பதற்குச் செலவு என்ன ஆயிற்று என்று கேட்டபோது. கட்டிடங்களுக்குப் பதினொரு லட்சமும் சாலைகளுக்கு ஆறரை லட்சமும் இதுவரை ஆகியிருப்பதாகத் தெரிந்தது. பட்டணத்தின் விஸ்தீரணத்தையும் கட்டிடங்களின் எண்ணிக்கையையும் உத்தேசிக்கும்போது செலவு என்னமோ ரொம்பக் குறைவு தான். ஆனால், இவ்வளவும் அணை கட்டி முடிந்த பிறகு என்ன ஆகும்? சீப் என்ஜினியரோ போட்ட திட்டத்துக்கு ஒரு வருஷம் முன்னாலேயே முடித்து விடுவதாகச் சொல்லுகிறார்! அப்படியானால் 1953-ல் இவ்வளவும் வீணாகப் போய் விடுமா?—இந்த யோசனை என் மனதில் தோன்றியிருப்பதைத் தெரிந்து கொண்டாரோ,என்னமோ! "இது ஒன்றும் வீணாகப் போகாது; வீணாகப் போகவேண்டிய அவசியம் இல்லை. அணைகட்டி முடிந்த பிறகும் இந்தப் பட்டணம் இப்படியே இருக்கலாம். பெரிய பெரிய ஆலைகளையும் தொழிற் சாலைகளையும் இங்கே அமைத்து நடத்துவதற்கு வேண்டிய வசதிகள் கிடைக்கும். 'மாயாறு' திட்டத்திலிருந்து மின்சார வசதியும் அதற்குள் கிடைத்து விடும். ஆலைகள்—தொழிற்சாலைகளோடு கூட ஒரு முதல்தர என்ஜினியரிங் கலாசாலையும் ஏற்படுத்தலாம். இப்போது தான் என்ஜினியரிங் கல்விக்கு ஏக கிராக்கி இருக்கிறதே! 'வொர்க் ஷாப்' கூடத் தயாராக இருக்கிறது. இப்படிப்பட்ட வொர்க் ஷாப் வேறு எங்கும் சுலபமாகக் கிடைக்காது!" என்று சீப்-என்ஜினியர் சொன்னார். "அப்படியானால் வொர்க் ஷாப்பையும் பார்த்து வைக்கலாம்" என்று அங்கே போனேன். வொர்க்ஷாப்புக்கு இன்னும் எல்லா இயந்திரங்களும் வந்து சேரவில்லை. ஒரு சிலதான் வந்திருக்கின்றன. அவை போடும் சத்தமே காதைச் செவிடாக்கி விடும் போலிருக்கிறது. சென்ற வருஷத்திலேதான் பூர்த்தியான ஒரு நவீன புத்தம் புதிய மெஷின் ஒன்று வந்திருக்கிறது. அது இரும்புக் கருவிகளை ரிப்பேர் செய்யும் மெஷின். இரும்புத் துண்டை அந்த மெஷினிலே கொடுத்து எந்தவிதமான உருவத்துக்கு வேணுமானாலும் அதை வளைத்து நிமிர்த்திக் குறுக்கி அகட்டிச் செப்பனிட்டுக் கொள்ளலாம் என்று சொன்னார்கள்.

"இயந்திரங்கள் இப்போதுதான் வரத் தொடங்கியிருக்கின்றன. இன்னும் நிறைய வர வேண்டும்!" என்றார் சீப் என்ஜினியர். அமெரிக்காவிலிருந்து இயந்திரங்கள் வருவதில் 'டாலர் எக்ஸ்சேஞ்' முதலிய கஷ்டங்களைப் பற்றிக் கூறினார். இயந்திரங்கள் தருவிப்பதில் தாம் கடைப்பிடிக்கும் முறை இன்னதென்பதையும் தெரியப்படுத்தினார்.

குறிப்பிட்ட அளவு வேலை செய்யக்கூடிய ஒரு பெரிய மெஷின் வாங்குவதைக் காட்டிலும் அதே அளவு வேலை செய்யக்கூடிய மூன்று சின்ன மெஷின்களை வாங்குவது நல்லது என்பது அவருடைய கொள்கை.

ரொம்பப் பெரிய மெஷினை ஓரிடத்திலிருந்து இன்னொரிடத்துக்குக் கொண்டு போவது கஷ்டம். அது கெட்டுப்போய் விட்டால் செப்பனிடுவது கஷ்டம். செப்பனிட்டு முடியும் வரையில் அடியோடு வேலை எல்லாம் தடைப்பட்டு விடும்.

ஒரு பெரிய மெஷினுக்குப் பதிலாக மூன்று சின்ன மெஷின்களை வைத்துக் கொண்டால், ஒன்றில் ரிப்பேர் ஏற்பட்டாலும் மற்ற இரண்டும் வேலை செய்து கொண்டிருக்கும். வேலை ஒருவாறு தடைப்படாமல் நடந்து கொண்டிருக்கும்.

இந்த காரணத்தினால், புதிய கம்பெனிகள் செய்யும் புது வகை மெஷின்களைக் காட்டிலும் பழைய கம்பெனிகள்



பவானி நதியில் அணைக்கட்டு வேலை தொடங்க வேண்டிய இடத்தில் பாதி ஆற்றைத் தாற்காலிக அணைபோட்டு அடைத்துவிட்டுப் பாக்கிப் பாதியில் தண்ணீர் விடப்படுகிறது.

சமபகுதியாகப் பிளந்து கொண்டுபோகும்படி அணையை நீட்டி விட்டிருக்கிறார்கள்.

இதன் பலனாக, நதியில் ஒரு பாதியில் மட்டும் தண்ணீர் போகிறது. மற்றொரு பாதியில் அணைக்கட்டு அஸ்திவாரம் போடுவதற்காகப் பாறைகள் வெட்டி எடுக்கப்படுகின்றன. சுமார் ஆறாயிரம் தொழிலாளிகள் இவ்விடத்தில் வேலை செய்து கொண்டிருக்கிறார்கள். சிலர் வெட்டுகிறார்கள்; சிலர் தோண்டுகிறார்கள்; வெட்டியதையும் தோண்டியதையும் மற்றவர்கள் தட்டுக் கூடையில் எடுத்துக் கொண்டுபோய் வெளியிலே கொட்டுகிறார்கள். சற்றுத் தூரத்தில் நின்று பார்த்தால் ஒரு எறும்புப் புற்றில் சுறுசுறுப்புள்ள எறும்புகள் அங்கு மிங்கும் ஓடித் திரிந்து வேலை செய்வது போலத் தோன்றுகிறது. கிட்ட நெருங்கிச் சென்று பார்த்தால் ஸ்திரீகளும், புருஷர்களும், சிறு பிள்ளைகளும்கூட மலர்ந்த முகங்களுடன் உற்சாகமாக வேலை செய்கிறார்கள் என்று தெரியவரும். தொழிலாளிகள் இவ்வளவு உற்சாகமா யிருப்பதற்குக் காரணம் என்னவென்று கேட்டுத் தெரிந்து கொண்டேன்.

முதலாவது, இங்கே கண்டிராக்டர்கள் இல்லை. என்ஜினியரிங் இலாகாவின் சொந்த மேற்பார்வையில் வேலை நடக்கிறது. தொழிலாளிகளில் பெரும்பாலோர் தினக் கூலி பெறுகிறார்கள். வேறு சிலர் இவ்வளவு வேலைக்கு இவ்வளவு கூலி என்ற கணக்கின்பேரில் சம்பளம் பெறுகிறார்கள். இந்த விதமான 'வேலைக்குத் தகுந்த கூலி' என்ற ஏற்பாட்டில் ஐந்து அல்லது ஆறுபேர் அடங்கிய கோஷ்டிகள் சேர்ந்து வேலை செய்கின்றன. சராசரியில் ஒவ்வொரு தொழிலாளிக்கும் ஒரு ரூபாயிலிருந்து ஒன்றரை ரூபாய் வரையில் கூலி கிடைக்கிறது.

கூலி கிடைப்பதுகூடப் பெரிய காரியமில்லை. பதினாறு அவுன்ஸ் ரேஷன் விகிதத்தில் தானியமும் கிடைக்கிறது. சீப் என்ஜினியர் வெங்கடாச்சாரியார் அதற்கு வேண்டிய ஏற்பாடும் செய்திருக்கிறார். உழைக்கும் தொழிலாளிகளுக்கு 14 அவுன்ஸ் தானியம் வேண்டும் என்று உணவு இலாகாவுடன் சண்டை பிடித்து வாங்கி, எல்லாத் தொழிலாளிகளுக்கும் தானியம் கிடைக்கும்படி செய்திருக்கிறார். அணைக்கட்டிலும் கால்வாய்களிலும் தற்போது வேலை செய்யும் சுமார் இருபதினா

செய்யும் பழைய மாடல் இயந்திரங்களைச் சீப் என்ஜினியர் விரும்புகிறார். புதிய மெஷின்கள் அமெரிக்காவிலிருந்து இங்கு வந்த பிறகு அவற்றை ஓடச் செய்வதற்கும் அமெரிக்க நிபுணர்கள் வரவேண்டியிருக்கிறது. சிலசமயம் அந்த மெஷின்கள் சரியாக வேலை செய்வதில்லை. அப்போது யாரைக் கேட்பது? அமெரிக்காவிலுள்ளவர்களைக் கேட்டுப் பதில் வருவதற்குள் இங்கே அணைக்கட்டு முடியவேண்டிய காலம் நெருங்கி வந்துவிடும்!

இவ்வாறு இந்த பவானி அணைக்கட்டு சம்பந்தமான ஒவ்வொரு காரியத்தையும் நம் என்ஜினியர்கள் முன் யோசனையுடனும் சிக்கனமாகவும் பின்னால் பயன்படக் கூடிய முறையிலும் செய்து வருவதை அறிந்து மிக்க மகிழ்ச்சி ஏற்பட்டது.

பழைய காலத்தில் பம்பாயில் கடலைத் தூர்த்த திட்டத்தைப்போல் பல திட்டங்களில் இந்தியாவின் பணம் பாழாய்ப் போயிருப்பதை நாம் அறிந்துதான் இருக்கிறோம். சுதந்திர இந்தியாவில் அந்த மாதிரியெல்லாம் காரியம் நடவாமலிருக்க வேண்டுமே என்பதில் நமக்குள்ள கவலை நம் என்ஜினியர்களுக்கும் இருப்பது சந்தோஷமான விஷயம் அல்லவா?

• • •

**பி**றகு, பவானி நதிக்கரைக்குச் சென்றோம். அணைக் கட்டுக்கு மத்தியஸ்தலமாக ஏற்படப் போகும் இடத்தில் இப்போது 'காபர் டாம்' (Coffer dam) ஒன்று எடுத்திருக்கிறார்கள். அதாவது நதியில் பாதி வரையில் அணை கட்டி, அந்தப் பாதி அணையின் முனையிலிருந்து நதியைச்

விரம் தொழிலாளிகள் இந்த இருவித நன்மைகளையும் அடைந்து வருகிறார்கள். பின்னே, அத் தொழிலாளிகள் உற்சாகமாக இருப்பதற்குக் கேட்பானேன்?

• • •

அணைக்கட்டு ஏற்படப் போகும் இடத்தை ஒரு வெள்ளைக் கோடு போட்டு எடுத்துக் காட்டியிருக்கிறார்கள். இந்த ஐந்து மைல் நீளக் கோடு அங்கங்கே பள்ளத்தில் இறங்கியும் மேட்டில் ஏறியும் அர்த்த சந்திர வடிவமாகப் போகிறது. அங்கங்கேயுள்ள பாறைகளையும் சிறு குன்றுகளையும் அணைக்கட்டுக்கு உபயோகப்படுத்திக் கொண்டிருக்கிறார்கள். அந்தக் குன்றுகளில் எல்லாம் உயரமான குன்றின் சிகரத்துக்கு எங்களை அழைத்துச் சென்றார்கள். மராமத்து மந்திரி ஏறியிருந்த காரை ஓட்டி வந்தவர் கோயமுத்தூர் சூபரின்டிங் என்ஜினியர் ஸ்ரீ வெங்கட்ராமன். இவருடைய தோற்றத்தைப் பார்த்த நண்பர் ஒருவர், "இவர் எங்கே பாறைமேல் ஏறப்போகிறார்?" என்று என் காதோடு சொன்னார். உண்மையில் ஸ்ரீ வெங்கட்ராமன்தான் மற்றவர்களுக்கு வழிகாட்டியாக முதலில் ஏறிப்போனார். ஆனால் அவரையும் முந்திக் கொண்டு இன்னொருவர் ஏற்கெனவே அந்தக் குன்றின் சிகரத்துக்குப் போய் வீற்றிருந்ததைப் பார்த்துத் திடுக்கிட்டுப் போனேன். அவர் யார் என்று நினைக்கிறீர்கள்? சாக்ஷாத் விநாயகப் பெருமான்தான்!

விக்னேசுவரர் கம்பீரமாகத்தான் வீற்றிருந்தார். ஆனால் அவரைச் சுற்றி இருந்திருக்க வேண்டிய கோவில் சுவர்கள் இடிந்து கிடந்தன. மேலே கூரையும் கிடையாது. வெயிலும் மழையும் அந்தப் பிள்ளையாரின் தலையிலேதான்.

"சுவாமி! விக்னேசுவரரே! தாங்கள் இந்தத் தமிழ்நாட்டைச் சேர்ந்தவர் அல்லவாமே? வடக்கேயிருந்து ஆயிரம் வருஷத்துக்கு முன்னால் வந்தவராமே? அப்படி வெளியூரிலிருந்து வந்துவிட்டு, எங்கள் சிவன் கோவில், பெருமாள் கோவில்களில் முதல் ஸ்தானம் பெற்றுவிட்டீர்கள். தனியாகத் தங்களுக்கும் கோயில்கள் எடுத்துக் கொண்டீர்கள். அப்புறம் ஆற்றங்கரை, குளத்தங்கரை, அரசமரம், ஆலமரம், நாற்சந்தி, முச்சந்தி, ஊர் எல்லை,— இப்படியாக எங்கே எங்கே இடம் கிடைக்குமோ அங்கெல்லாம் பார்த்து உட்கார்ந்து கொண்டீர்கள். இவ்வளவும் போதாமல் இந்தப் பவானி சாகரத்து அணைக்கட்டின் உச்சி மேட்டுக்கு வந்து முன்னதாகவே அமர்ந்து விட்டீர்களே? இது நியாயமா? இங்கே அணைக்கட்டுப் போட்டுப் பவானி நதியின் தண்ணீரைத் தேக்க ஆரம்பித்து விட்டால் சுற்றிலும் ஒரே சமுத்திரம் மாதிரி இருக்குமே? ஜில் ஜில் என்று காற்று அடிக்குமே? ஜலதோஷம் பிடித்துக்கொண்டால் என்ன செய்கிறது?" என்று கேட்டேன். இவ்வளவு கேள்விகளுக்கும் விநாயகர் பதில் சொல்லாமலே மௌனம் சாதித்தார். "சுவாமி! இது என்ன கல்லுப் பிள்ளையாராயிருக்கிறீர்களே!" என்றேன். விநாயகரின் பெரிய முகத்தில் புன்சிரிப்பும் சிறிய கண்களில் குறுகுறுப்பும் ஒரு கணம் தோன்றியது போலக் காணப்பட்டது. "விநாயகரே! தங்களுடைய திருவுருவத்தை எந்த மகா சிற்பி முதன் முதலில் கற்பனை செய்தானோ அவனுடைய கலைத்திறமையிலும் நகைச்சுவையிலும் ஆயிரத்தில் ஒரு பங்கு எனக்கு அருள் புரியுங்கள். மற்றப்படி இந்தப் பவானி சாகர அணைக்கட்டு வேலையை யாதொரு விக்னமும் இல்லாமல் நடத்திக் கொடுங்கள். இது போன்ற அணைக்கட்டுகள்—நீர்ப்பாசனத் திட்டங்களின் உதவியால்தான் தமிழ்நாட்டு மக்கள் உணவுக்கு அயல்நாடுகளை எதிர்பாராமல் வேண்டிய தானியங்களை உற்பத்தி செய்து கொள்ள வேண்டும்!" என்று பிரார்த்தனை செய்தேன்.

அந்தப் பாறையின் உச்சியிலிருந்து என்ஜினியர்கள் அணைக்கட்டு சம்பந்தமான மற்ற எல்லா விவரங்களையும் எடுத்துச் சொன்னார்கள். மொத்தம் அணைக்கட்டின் நீளம் ஐந்தரை மைல். அணையின் மத்தியில், ஆற்று வெள்ளத்துக்குப் போக்கு மதகுகள் அமைக்க வேண்டிய இடத்தில், இரண்டு பர்லாங்கு நீளம் மட்டும் கருங்கல்லையும் சிமெண்டையும் கொண்டு அணை கட்டப்படும். மற்றப் பகுதியெல்லாம் மண்ணை அணைத்து அணை போடப்படும். அணையின் அடிப் பகுதியின் அகலம் கிட்டத்தட்ட ஒரு பர்லாங்கு இருக்கும். கல்லணை ஆற்றின் தரை மட்டத்திலிருந்து 150 அடி உயரம் இருக்கும். மண் அணையின் உயரம் 100 அடி வரையில் இருக்கும். பவானி நதியில் வரும் தண்ணீரைத் தவிர சுற்று வட்டாரத்தில் 1621 சதுர மைல் விஸ்தீரணத்தில் பெய்யும் மழைத் தண்ணீரும் பவானி சாகரத்தில் வந்து சேரும். 2746 கோடி கன அடி தண்ணீரைப் பவானி சாகரத்தில் தேக்கலாம். தேங்கும் தண்ணீரின் மேற் பரப்பு 26 சதுர மைல் விஸ்தீரணம் இருக்கும். மொத்தம் 88 மைல் நீளமுள்ள கால்வாய்கள் வெட்டி அவற்றின் வழியாகத் தண்ணீரைக் கொண்டு போய் இரண்டு லட்சம் ஏக்கரா நிலத்துக்குப் பயன்படுத்தலாம். இதில் பத்தாயிரம் ஏக்கராதான்



"வாச்மேன்! ஒரு 'ஸ்குரு டிரைவர்' உடனே வேண்டும். உன்னால் எங்கிருந்தாவது கொண்டுவர முடியுமா?"

"எஜமான்! போன மாதத்தில் மோட்டார் டிரைவருக்கே சம்பளம் கொடுக்கக் கட்டவில்லை என்றீங்களே? 'ஸ்குரு டிரைவர்' வேறே என்னத்துக்குங்க?"

---

நெற்பயிர் செய்யக் கூடும். பாக்கி நிலத்தில் பருத்தியும் சோளமும் மாற்றி மாற்றிப் பயிர் செய்யலாம்.

இந்த விவரங்களை யெல்லாம் கேட்டுத் தெரிந்து கொண்டோம். என்ன தெரிந்து கொண்டாலும் இந்த மாதிரி புள்ளி விவரங்கள் எங்களுடைய ஞாபகத்தில் இருக்க முடியாது என்பது என்ஜினியர்களுக்குத் தெரிந்திருந்தது. அதுவும் பத்திரிகைக்காரர்களை நம்பினால் வந்தது மோசம். நாளை வருஷம் கழித்து நானே பவானி சாகரத்துக்குப் போகலாம். "என்ன, ஐயா, என்ஜினியரே! இந்தப் பவானி சாகரத்தில் 2746 கோடி கன அடி தண்ணீர் தேங்கி நிற்கும் என்று அன்றைக்குச் சொன்னீரே? இப்போது 2745 கோடி 99¾ லட்சம் கன அடி தண்ணீர் தானே இருக்கிறது? பாக்கி கால் லட்சம் அடி தண்ணீர் என்ன ஆயிற்று?" என்று கேட்கலாம். அப்போது என்ஜினியர்கள் பதில் சொல்ல முடியாமல் விழிக்கும்படி நேரிடும் அல்லவா? அதற்கெல்லாம் இடமில்லாதபடி என்ஜினியர்கள் புள்ளி விவரங்களை அச்சடித்தே எங்கள் கையில் கொடுத்து விட்டார்கள்!

சில பெரிய உத்தியோகஸ்தர்கள் உண்டு; அவர்கள் தங்களுக்குக் கீழே வேலை செய்கிறவர்களைப் பற்றி ஓயாமல் புகார் சொல்லிக்கொண்டே யிருப்பார்கள். "சுத்த உபயோகமற்றவர்கள்; வரவர மோசம்; வேலையே செய்வதில்லை; திறமையும் கிடையாது!" என்று குறைப்பட்டுக் கொண்டே யிருப்பார்கள். சீப் என்ஜினியர் வேங்கடாச்சாரியார் இதற்கு மாறான இயல்பு கொண்டவர். தமக்குக் கீழே வேலை செய்யும் உத்தியோகஸ்தர்கள், சிப்பந்திகள், தொழிலாளிகள் — எல்லாரையும் பாராட்டிக்கொண்டே யிருந்தார். சாலை ஓரங்களில் வைக்கப்பட்டிருந்த செடிகளைக்கூடப் பாராட்டினார். "ஒவ்வொரு சாலைக்கும் ஒவ்வொரு வகைச் செடி வைக்கவேண்டும் என்று சொன்னேன். அந்தப்படி உடனே வைத்து விட்டார்கள் செடிகள் ஜம் ஜம் என்று வளருகின்றன!" என்றார். சில இடங்களில் செடிகள் பட்டுப் போய்க் குழிகள் காலியா யிருப்பதைப் பற்றி அவர் குறிப்பிடவே யில்லை. ஒரு வேளை நான் அந்த விஷயத்தை ஞாபகப்படுத்தி யிருந்தால், "பாருங்கள்! அவை ரொம்பப் புத்திசாலிச் செடிகள்! இங்கே தண்ணீர் கொண்டு வந்து கொட்டுவது எவ்வளவு கஷ்டமாயிருக்கிறது என்பதைத் தெரிந்து கொண்டு அந்தச் செடிகள் தாங்களே பட்டுப் போய்விட்டன!' என்று அவர் பெருமையுடன் சொல்லி யிருக்கலாம்.

பவானி அணைக்கட்டில் தோண்டி எடுக்கப்படும் கல்லின் பெருமையைக்கூட நாங்கள் கேட்கும்படி நேர்ந்தது. நதியில் பாறைகளைத் தோண்டும்போது சில இடங்களில் வெள்ளை மாக்கல் கிடைக்கிறதாம். ரொம்ப ரொம்ப அழகான மாக்கல்லாம்! ஆற்றோரத்தில் ஒரு கொட்டகையில் சிலர் ஏதோ வேலை செய்து கொண்டிருந்தார்கள். "அது என்ன?" என்று மராமத்து மந்திரி கேட்டதற்கு, "இங்கே தோண்டி எடுத்த மாக்கல்லைக் கொண்டு இவர்கள் கற்சட்டி செய்கிறார்கள். அழகான கற்சட்டிகள். சமையலுக்கு ரொம்பவும் தகுதியானவை. இந்தக் காலத்துப் பாத்திரம் எதுவும் கற்சட்டிக்கு ஈடாகாது. இந்த மாக்கல்லைத் தூளாக்கிக் கொஞ்சம் வாசனை கலந்துதான் 'டால்கம் பவுடர்' என்று டப்பியில் அடைத்து விற்கிறார்கள்! நாமும் விலை கொடுத்து வாங்குகிறோம்!" என்று என்ஜினியர்களில் ஒருவர் கூறினார்.

கடைசியாக நாங்கள் அவர்களிடம் விடை பெற்றுக் கொண்டு காரில் ஏறிய போது தலைக்கு இரண்டு கற்சட்டிகள் 'பிரஸெண்ட்' கிடைத்தன. அவற்றின் மீது L. B. P. என்று பெருமிதத்துடன் செதுக்கப்பட்டிருந்தது. (லோயர் பவானி பிராஜக்ட் என்பதற்குச் சுருக்கம் L. B. P.) அவ்வளவு ஆர்வத்துடன் கொடுத்த கற்சட்டிகளை விட்டுவிட மனமில்லாமல் எடுத்துக்கொண்டு போனோம். வழியில் ஒரு ரயில்வே ஸ்டேஷனில் ஒரு பெண்மணி அந்தக் கற்சட்டிகளைப் பார்த்

தார். ஏதோ அதிசயத்தைக் கண்டது போல் திகைத்து "இது என்ன?" என்று கேட்டார். நான் கற்சட்டியின் புகழை, அதுவும் பவானி சாகரத்துக் கற்சட்டியின் புகழை அந்த அம்மாளின் காதில் போட்டு வைத்தேன். ஆனால் எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்து விட்டு, அந்த அம்மாள் "அழகாய்த் தானிருக்கிறது! இந்தக் காலத்தில் 'ஸ்டேபிரைட்' 'எவர்ஸில்வர்' பாத்திரங்களை வாங்குவார்களா? கற்சட்டியைப் போய் வாங்குவார்களா?' என்று சொன்னதும் எனக்கு என்னமோ மாதிரி ஆகிவிட்டது! பாருங்கள்! உலகம் அப்படி மாறுதல் அடைந்து வருகிறது! வீட்டுப் பெண்கள் நவீன 'ஸ்டேபிரைட்' 'எவர்ஸில்வர்' பாத்திரங்கள் வேண்டும் என்கிறார்கள். நவீன என்ஜினியர்கள் பழைய கற்சட்டிகளைப் புகழ்கிறார்கள்!

* * *

**ப**வானி சாகர அணைக் கட்டு வேலையைப் பார்க்கும் சந்தர்ப்பத்தை எனக்கு அளித்ததற்காக ஸ்ரீ பக்தவத்ஸலத்துக்கு நன்றி கூறுவதா, வேண்டாமா என்ற பிரச்னையை நான் இன்னும் முடிவு செய்யவில்லை. என்னுடைய மனது நன்றி செலுத்தச் சொல்கிறது. உடம்பு 'வேண்டாம்' என்று மறுக்கிறது. கனம் பக்தவத்ஸலத்துடன் போனதினால் படைபடைக்கிற வெய்யிலில் கிட்டத்தட்ட ஏழெட்டு மைல் நடக்கும்படி ஆகிவிட்டது. ஏதோ மோட்டார் காரில் உட்கார்ந்தபடி, "ஓகோ! அதுதான் பவானி நதியோ? இங்கேதான் அணை கட்டப் போகிறீர்களோ? அதுதான் பாலமோ? இதுதான் குமாஸ்தாக்களுக்கு வீடோ?" என்று பார்த்துத் தெரிந்துகொண்டு, மாலை கிடைத்தால் போட்டுக் கொண்டு, விருந்து கிடைத்தால் சாப்பிட்டுவிட்டு, கொஞ்சம் சிரம பரிகாரமும் செய்து கொண்டுவிட்டு, ஊருக்குப் புறப்படலாம் அல்லவா? ஸ்ரீ பக்தவத்ஸலம் அப்படிச் செய்யவில்லை. ஒவ்வொரு பாறையாக ஏறிப் பார்க்கிறார்; ஒவ்வொரு இடமாகப் போய்ப் பார்க்கிறார்; ஒவ்வொரு கல்லாகத் தட்டிப் பார்க்கிறார்; ஒவ்வொரு பிளானையும் பிரித்துப் பார்க்கிறார்; ஒவ்வொரு வீட்டுக்குள்ளும் நுழைந்து பார்க்கிறார்; ஒவ்வொரு கதவையும் ஒவ்வொரு ஜன்னலையும் கவனித்துப் பார்க்கிறார்; ஒவ்வொன்றுக்கும் செலவுத் திட்டம் கேட்கிறார்; லாப நஷ்டம் விசாரிக்கிறார்! இவ்வளவும் முடிவதற்குள் மத்தியானம் மணி இரண்டு ஆகிவிட்டது. எனக்கும் மற்றப் பத்திரிகையாளருக்கும் போதும் போதும் என்று ஆகிவிட்டது.

பத்திரிகைக்காரர்கள் எங்கேயாவது போனால் காரசாரமாக எழுதுவதற்கு விஷயம் ஏதேனும் வேணும் என்று தேடுவார்கள். இங்கேயோ அத்தகைய விஷயம் ஒன்றுமே கிடைக்கவில்லை. எங்களுக்குப் 'போட்ட சாப்பாட்டிலே கூட ஒன்றும் காரமாயில்லை!

இப்படி நாங்கள் எண்ணிக் கொண்டிருந்தபோது பவானி ஹவுஸ் வாசலில் ஒரு நூறு, நூற்றைம்பது பேர் திடுதிடுவென்று வந்து கூட்டமாய் நின்றார்கள். "சரி! ஏதோ காரசாரமான விஷயம் கிடைக்கப் போகிறது. இவர்கள் அணைக் கட்டில் வேலை செய்யும் தொழிலாளிகளாய்த்தானிருக்கவேண்டும். அதிகாரிகளைப் பற்றிக் குறை சொல்லத்தான் வந்திருக்கிறார்கள். இந்த என்ஜினியர்களின் குட்டு இப்போது வெளியாகி விடும்!" என்று எண்ணிக் கொஞ்சம் உற்சாகம் அடைந்தோம்.

வந்து நின்றவர்களிடம் மராமத்து மந்திரி சென்று "என்ன விசேஷம்? எங்கே வந்தீர்கள்?" என்று கேட்டார்.

"இங்கே அணைக்கட்டுக் கட்டினால் எங்கள் கிராமம் முழுகிப் போய்விடும்!" என்று வந்தவர்களில் ஒருவர் சொன்னார்.

"அதற்கு என்ன செய்யலாம்? இந்த அணைக்கட்டினால் உங்கள் ஜில்லாவுக்கு எவ்வளவு நன்மை ஏற்படும்? இரண்டு லட்சம் ஏக்கரா நிலத்துக்குப் பாசன வசதி கிடைக்குமே? இதற்காக ஒரு சில கிராமங்கள் முழுக நேர்ந்தால் அதை ஆட்சேபிக்கலாமா?" என்றார் மந்திரி.

"அதைப்பற்றி நாங்கள் ஆட்சேபிக்கவில்லைங்க! அணைக்கட்டு அவசியம் வேண்டியதுதான். எங்களுக்கு வேறு நிலம் எங்கேயாவது கொடுக்க வேண்டும் என்று கேட்பதற்காகவே வந்தோம்!" என்று வந்தவர்கள் சொன்னார்கள்.

"அதற்கென்ன? வேறு நிலம் கிடைத்தால் பேஷாய்க் கொடுக்கிறோம். அல்லது நியாயமான நஷ்ட ஈடு கட்டாயம் கொடுக்கிறோம்!" என்றார் மராமத்து மந்திரி.

"ரொம்ப சந்தோஷம். அதுதான் நாங்கள் வேண்டி வந்ததும்!" என்று சொல்லிவிட்டு அந்தக் கிராமவாசிகள் சந்தோஷமாகச் சென்றார்கள்.

போகும்போது மேற்படி கிராமவாசிகளில் ஒருவர் "பேஷான மராமத்து மந்திரி!" என்று சொல்லிக்கொண்டு போனது காதில் விழுந்தது.

அந்தக் கிராமவாசிகளும் பேஷானவர்கள்தான்! இவ்வளவு சாதுக்கள் நியாய புத்தியுள்ளவர்கள், — தமிழ் நாட்டிலே தவிர வேறு எங்கே கிடைப்பார்கள்?

# பவானி சாகரம்



மராமத்து மந்திரி கோஷ்டியார் பவானி நதியின் மீது அமைக்கப்பட்டு வரும் தாற்காலிகப் பாலத்தில் நின்று பார்க்கிறார்கள். மத்தியில் தலையில் தொப்பி யுடன் நிற்பவர்தான் சீப் என்ஜினியர் ஸ்ரீ ஏ. ஆர். வேங்கடாச்சாரியார்.

•

பவானி அணைக்கட்டுப் பிரதேசத்தின் ஒரு நெடுங்காட்சி. விநாயகர் குன்றின் உச்சி யிலிருந்து எடுத்த படம். Top of Dam என்று எழுதி யிருப்பதைக் கவனிக்கவும்.

அணைக்கட்டுப் பிரதேசத்தில் நின்று சீப் என்ஜினியர் மாப்புகள், பிளான்கள், புள்ளி விவரங்களைக் காட்டி வேலைத்திட்டத்தை விளக்குகிறார். அவருக்குப் பின்னால் நிற்பவர் ஸ்ரீ ஆனந்த ராவ்.

பவானி நதியைப் பாதியில் அடைத்து வெள்ளத்தைத் திருப்பிவிட்டு மற்றப் பாதியில் பாறையைத் தோண்டும் வேலை நடக்கிறது. மூவாயிரம், தொழிலாளிகள் இங்கே குதூகலமாக வேலை செய்கிறார்கள.







ஜன்னலுக்குச் சமீபமாகச் சாய்வு நாற்காலியில் அமர்ந்து அர்த்தமற்று வெளியே பார்த்துக் கொண்டிருந்தான் நடராஜன். இரவு மணி பத்திருக்கும். வானத்தில் அங்குமிங்கும் மூலைக் கொன்றாக நட்சத்திரங்கள் மின்னிக் கொண்டிருந்தன. மேகக் கூட்டங்கள் கருத்துக் குமைந்து ஒன்றை ஒன்று முட்டி நெருங்கின. ஜன்னலுக்கு எதிர்ச் சாரிலிருக்கும் இரண்டொரு மரங்களும் இலைகளை அசைக்காமல் காற்றுக்காக நின்றது நின்றபடி நின்று தவமியற்றுவன போலிருந்தன.

அவனுடைய சித்தம் சரியாயில்லை. இப்பொழுது மாத்திரமில்லை; கடந்த நான்கு நாட்களாய் அவன் சித்தம் சரியாயில்லை. வாழ்க்கையில் ஒரு சிறு நிகழ்ச்சிகூட மனதைப் போராட்டத்தில் கொண்டு வந்து விட்டுவிடும் என்பதை அப்பொழுதுதான் அவனால் உணர முடிந்தது.

'பெண்களின் ஒரு சொட்டுக் கண்ணீர் போதும். அதனால் இந்த உலகத்தையே ஆட்டி வைத்து அடக்கி விடலாம்' என்று ஏதோ ஒரு அசரீரி எங்கிருந்தோ வந்து சொல்லுவது போல அவன் காதில் கணீரென்று விழுந்தது.



'கண்ணீர் — நீலிக் கண்ணீர்; பலவீனமான பெண்களின் கடைசி ஆயுதம் ஒரு சொட்டுக் கண்ணீரென்ன, கண்ணீர் பிரளயமாகட்டுமே — உண்மையும் உறுதியும் கொண்டவன் நெஞ்சை ஒரு நாளும் அசைத்துவிட முடியாது.'

அசரீரிக்குப் பதில் கொடுத்துவிட்டான் நடராஜன். ஆனால் இந்தப் பதிலோடு அவன் சமாதானமடைந்துவிடவில்லை.

'எது உண்மை? எது உறுதி? உன்னுடைய எண்ணமும் பிடிவாதமுமா? இல்லை, நான் கணவன் என்ற மமதாகாரமா?'

இன்னொரு கேள்வியைத் தூக்கியெறிந்து விடை கேட்டது அசரீரி.

கணவனென்ற மமதையில் ஒருநாளும் நான் அவளிடம் நடந்து கொண்டதில்லை. கணவன் என்ற எண்ணம் மமதையல்ல; உரிமையின் உணர்ச்சி. அவள் தன் கண்ணீரால் அந்த உரிமை உணர்ச்சியை மழுங்க வைக்கப் பார்த்தாள். சம உணர்ச்சி கூட இல்லாமல் என்னை அவளுக்கே முழு அடிமையாக்கிவிடப் பார்க்கிறாள் நீலிக் கண்ணீரால். இது என்னுடைய வாதமல்ல. உலகத்தின் நியாய வாதம். சாஸ்திரம்—சம்பிரதாயம் எல்லாவற்றையும் சுட்டுப் பொசுக்கிவிடலாம். ஆனால் பக்கத்திலிருப்பவர்களின் முணுமுணுப்பு மனதை உறுத்துகிறதே? 'இன்று வெள்ளிக்கிழமை—பூரண கர்ப்பிணி. புக்ககத்திலிருந்து பிறந்தகம் போகக் கூடாது' என்றால் உடனே கண்ணீரா? கணவனை எல்லா வகையிலும் அடிமையாக்கும் மனப்பண்பா?

'பெண்களின் மனது சட்டென்று இளகிவிடும்' என்று அசரீரி

வேறு ஏதோ ஒன்றைச் சொல்லி அவனுடைய மனதைத் திருப்பப் பார்த்தது.

'இளகிய மனதா! கல் நெஞ்சு! ஊருக்குப் போய் ஐந்து நாட்கள் ஆகி விட்டதே? சௌக்கியமாய்ப் போய்ச் சேர்ந்தேன் என்று இதுவரையில் ஒரு கடிதம் உண்டா? நான் தனிமையில் எப்படி இருக்கிறேன்? எங்கே சாப்பிடுகிறேன்? சரியாகத் தூங்குகிறேனா? கைப் பணமெல்லாம் செலவழிந்துவிட்டதே. பணத்திற்கு என்ன செய்தேன்? இவற்றையெல்லாம் பற்றி அவளுக்குக் கவலை இருக்கிறதா? அவ்வளவும் மறந்து விட்டதா? நெஞ்சு இரும்பா? பிறந்த வீட்டுச் சொர்க்க வாசலில் காலடி வைத்தவுடனே புருஷன் வீடு நரகமாகி விடுமோ? பிறந்த வீட்டின் சூழ்நிலை—உபதேசம் எல்லாம் ஆழ்ந்த பற்றுதலும் அன்பும் கொண்ட புருஷனைக்கூடச் சோதனைக்குட்படுத்தி வாழ்க்கையின் தரத்தைக் குறைத்துக் கொள்ளும்படிச் சொல்லுகிறது—இல்லையா?'

'அவள் உனக்குக் கடிதம் எழுதாததினால் கல் நெஞ்சமுடையவள் என்று தீர்மானித்து விடுவதா? இங்கிருக்கும் நீ அவள் நிலையை என்ன கண்டாய்? பெற்றோர்களின் பிடிவாதமும் கோரிக்கைகளும் ஒருபுறம்—புருஷனின் ஆக்ஞை ஒருபுறம்—இவற்றிடையே பாவம் ஒரு பெண் என்ன செய்வாள்? உலகத்தில் எல்லாவற்றையும் விட உயர்ந்தவர் கணவர் என்ற அபிப்பிராயம் மனதில் இருந்தாலும் அதை ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் பகிரங்கமாக நிரூபிக்கக்கூடிய துணிவு எல்லாப் பெண்களுக்குமே ஏற்பட்டுவிடுமா? உனக்குக் கடிதம் எழுத எவ்வளவோ தடங்கல்கள். எதை எழுதினாலும் உனக்குக் குற்றமாகப் படுமோ என்று பயம். கண நேரங்கூட அவளால் உன்னை மறந்துவிட முடியாது—உன்னை நினைத்தால் அழுது விடுகிறாள்—கண்ணீர் விடுகிறாள்—நீலித்தனமான கண்ணீரல்ல—சாகஸக் கண்ணீரல்ல—பிரிவாற்றாமையினால் பீறிக்கொண்டு வரும் கண்ணீர்! ஒருவேளை உங்கள் இருவர் ஹிருதயமும் தெரியாமல் வளர்ந்த உரிமைகள் குறுக்கே வந்து நிற்பதற்காக விடும் கண்ணீராகவுமிருக்கலாம்.........!'

அசரீரி இன்னும் ஏதேதோ சொல்லிற்று. அவையெல்லாம் அவன் காதில் சரியாக விழவில்லை. நிமிர்ந்து உட்கார்ந்து ஜன்னலுக்கு வெளியே பார்வையைச் செலுத்திக் கொண்டிருந்த நடராஜன் அப்படியே நாற்காலியில் சாய்ந்து கண்களை மூடிக்கொண்டான்.

இருளில் ஒரு உருவம்: சாவித்திரி—அவன் மனைவி. மண வாழ்க்கையில் நெடு நாட்களான பிறகு அவள் கண்ணீர் விட்டுக்கொண்டு நின்ற காட்சி! சுவரோரத்தில் ஒன்றன்மீது ஒன்றாக அடுக்கி வைத்திருந்த பெட்டிகளின் மீது கையை ஊன்றிக்கொண்டு நெஞ்சிலிருந்து வரும் வார்த்தைகளைச் சொல்லத் தடுமாறி விக்கி விக்கிக் கண்ணீர் விடும் காட்சி! அவளுடைய சிரித்த முகத்தைப் பார்த்துப் பார்த்து அவன் அலுப்போ வெறுப்போ அடைந்ததில்லை. ஆனால் அழுத முகத்தைப் பார்க்கவோ அவன் விரும்பவேயில்லை. எனினும் அந்த முகம் அவன் மனத் திரையிலிருந்து அகலாமல் நிலைத்து விட்ட காரணம் என்ன?

• • •

"ஏன் இப்படி அழுகிறாய்? உன்னை அடித்தேனா? வைதேனா? இப்படி அழுதுவிட்டால் ஜம்பம் சாயாது. இதற்கெல்லாம் இளகிப்போகிற ஹிருதயமில்லை எனக்கு. வெள்ளிக்கிழமை போகக் கூடாது என்றால் போகக்கூடாதுதான்!" என்று நடராஜனின் குரல் உச்சஸ்தாயியில் சஞ்சாரம் செய்தது.

சாவித்திரி புடவைத் தலைப்பால் கண்களைத் துடைத்துக் கொண்டாள். பாவம்! அந்தப் புடவை எவ்வளவு கண்ணீரைத்தான் உறிஞ்சும்? எவ்வளவு துடைத்தாலும் பிரவாகம் கடல் மடையாகத்தானிருந்தது. நேரம் செல்லச் செல்ல முகம் வீங்கிச் சிவந்து விட்டது. இடையே பொருமும் விக்கலின் தொனி வேறு கேட்டது.

## பேனா முனை!



"நான் இப்போது எழுதியிருப்பதை எந்தப் பத்திரிகைக்காரரும் அவசியம் ஏற்றுக் கொள்ளுவார்!"

"அப்படி என்ன ஸார், பிரமாதமாக எழுதியிருக்கிறீர்கள்?"

"என்னை ஒரு சந்தாதாரனாகச் சேர்த்துக் கொள்ளும்படி எழுதியிருக்கிறேன்!"

'வெள்ளிக்கிழமை போவது நல்லதல்ல என்ருல் இவ்வளவு துக்கம் ஏற்பட்டு விடுமா? ஆச்சரியம்! நீலித்தனம்!'

அவன் உறுமினன்.

அவள் விக்கலிடையே நிக்கித் நிக்கிப் பேச யத்தனித்தாள்.

"அப்பா...!"

"என்ன அப்பா—அம்மா? இப்படித் தான் அழச் சொல்லிக் கொடுத்தானோ?"

அவள் கேவல்களுக்கிடையே ஒருவித மாக வார்த்தையை முடித்தாள்.

"அப்பா போனல் பாதகமில்லேன்னு சொன்னர்!"

உட்கார்ந்திருந்தவன் எழுந்து நிற்கும் அளவிற்கு அவனுடைய ஆத்திரம் அதிக மாகியது. "அப்பா பாதகமில்லே என்று சொன்னரா? அவருக்குப் பாதகமில்லா மல் இருக்கலாம்; எனக்குப் பாதகம்!— ஊர் முழுவதும் வெள்ளிக்கிமை, போகக் கூடாது என்று சொல்லுகிருர்கள், அப்பா வுக்கு மாத்திரம் தனி சாஸ்திரமோ!"

"அப்பா கோடியாத்துக் கனபாடி களைக் கேட்டுக் கொண்டு வந்தாராம். வெள்ளிக்கிழமையா யிருந்தால் பாதக மில்லே. சாப்பிட்ட பிறகு கிளம்பலாம்னு சொன்னராம்!" என்ருள் அவள்.

"கனபாடிகளுக்கு என்ன? அதற்குத் தானே தெருக் கோடியில் உட்கார்ந்திருக் கிருர் மனுஷ்யர்! — எல்லாவற்றிற்கும் தோஷம் கற்பிக்கிறவரும் அவர்தான்; எல்லா தோஷத்திற்கும் ஒரேயடியாய்ப் பரிகாரம் சொல்லுகிறவரும் அவர்தான்!"

"நான் என்ன செய்வேன்? அவர்கள் பிடிவாதமா யிருக்கிருர்களே?"

"பிடிவாதமாக இருக்கிருர்களா? ஹூம்.........பிடிவாதமாய் இருந்தால் போய்த் தொலே! இப்படிக் கசிந்து கசிந்து அழுது கொண்டு நிற்காதே!"

'தொலே' என்ற வார்த்தையைக் கேட் டதும் சாவித்திரியின் அழுகையும் ஆத் திரமும் முன்னிலும் அதிகமாகப் பீறிட்டுக் கொண்டு வந்துவிட்டது. "தொலேயா...! உங்களுக்கு அவ்வளவு வெறுப்பாய்ப் போயிடுத்தா? இரக்கமில் லாமல் போயிடுத்தா?" என்ருள்.

"வெறுப்பு தானகவே உண்டாகி விடாது. இரக்கமில்லாமல் போக மனது எனக்குக் கருங்கல்லாக இல்லே—ஒன்று தெரிந்துகொள்—ராமன் பூரண கர்ப்பிணி யாகிய ஜானகியைக் கானகத்தில் கொண்டு போய் விடு என்று சொன்ன பொழுது கற்சிலையாய் இல்லே—இரக்கம், பச்சா தாபம், சோகம், துக்கம் எல்லாம் அவன் மனதிலும் இருந்தது. அவன் தன் மன திற்குப் பட்டதை—'சரி'யென்று தோன் றியதைத் துணிவோடு செய்தான். அப்



நகரவாசி:— பார்த்தீரா, நேற்றுத் தான் இந்த சைக்கிளே நூறு ரூபாய்க்கு வாங்கினேன்......

கிராமவாசி:—அந்தப் பணத்துக்கு ஒரு பசு வாங்கியிருக்கலாமே!

நகரவாசி:— பசுவின்மேல் ஏறிச் சவாரி செய்ய முடியுமா, ஐயா!

கிராமவாசி:—உங்கள் சைக்கிள் பால் கறக்குமா, ஸார்!

---

படியே என் மனதிற்கும் தோன்றியதைத் துணிச்சலாகச் செய்துவிடுவேன்" என்று நடராஜன் தன்னைச் சாக்ஷாத் ராமச்சந்திர னுக்கு உதாரணமாக எடுத்துக் காட்டி விட்டு, கோதண்டத்தை லாகவமாக எடுத்துக் கொள்ளுவது போல மேல் துண்டை எடுத்து உதறிப் போட்டுக் கொண்டு கம்பீரமாக வெளியே சென்ருன்.

அன்று சாவித்திரியின் பிரயாணம் நின்றுவிட்டது. மாப்பிள்ளையின் கோபத் திற்கு எதிராக எந்த மாமனுரால்தான் ஒரு காரியம் செய்ய முடியும்?

மறு நாள் காலேயில் போகும்போது சாவித்திரி தன்னை நமஸ்காரம் செய்து விட்டுச் சொல்லிக் கொண்டு போவாள் என்று நடராஜன் நினைத்தான். அவன் காலேயில் எழுந்தபொழுது அவர்கள் ஊருக்குப் போய்விட்டார்கள் என்பதைக் கேட்டுக் கலங்கினன்.

என்ன துணிச்சல்! போகட்டும், போகும்போதுதான் சொல்லிக் கொண்டு போகவில்லே; போய் நான்கு நாளாகி விட்டதே? போய்ச் சேர்ந்தேன் என்று அவளிடமிருந்து ஒரு கடிதம் உண்டா? பிறந்த வீட்டுச் சூழ்நிலே கணவனைக்கூட அலட்சியம் செய்யும்படிச் செய்துவிடும் போலிருக்கிறதே!

நான்கு நாட்களாய் அவன் புத்தியே சரியான நிலேயில் இல்லே. எந்த நேரம் பார்த்தாலும் யோசனைதான்! என்று

மெழாத தீர்மானங்களும் அபிப்பிராயங்களும் புகைந்து புகைந்து மனதில் எழுந்தன. கோபமா? ஆத்திரமா? வெறுப்பா? அனுதாபமா?—அவன் மனதில் தோன்றியது எது வென்று சொல்ல முடியாது.

• • •

சாய்வு நாற்காலியில் கண்களை மூடிக் கொண்டு படுத்திருந்த அவன் திடீரென்று எழுந்து நிமிர்ந்து உட்கார்ந்தான். மங்கலாக எரிந்து கொண்டிருந்த விளக்கைப் பிரகாசப்படுத்தினன் தாவினற்போல் மேஜைமீதிருந்த காகிதத்தையும் பேனவையும் எடுத்தான். அவசர அவசரமாகப் பேனவைத் திறந்து எழுத ஆரம்பித்தான்.

அன்பு மிக்க சாவித்திரிக்கு......

'கடகட' வென்று அவனுக்குப் பின்னுலிருந்து ஒரு சிரிப்பு!

அதற்குப் பிறகு அசரீரியின் வார்த்தைகள்!

'பெண்களின் ஒரு சொட்டுக் கண்ணீர் போதும், அப்பனே! இந்த உலகத்தைக் கூட அழித்துப் படைத்து விடலாம்.'

அவன் சட்டென்று காகிதக் கத்தையைக் கீழே போட்டான். 'ஒரு சொட்டுக் கண்ணீரென்ன? கண்ணீர் பிரளயமாகப் பெருக்கெடுத்து ஓடட்டுமே, உண்மையும் உறுதியும் கொண்டவன் நெஞ்சை ஒரு நாளும் அசைத்துவிட முடியாது' என்று முணுமுணுத்துக் கொண்டே பேனவை மூடி மேஜைமீது எறிந்துவிட்டு, மறுபடியும் சாய்ந்து படுத்துக் கண்களை மூடிக் கொண்டான்.

அவனுக்குப் பின்னுலிருந்து எதுவோ 'கடகட' வென்று நகைத்தது.

எது உண்மை?

---

# காலக்ஷேபம்

---

கணவன் (பொருட்காட்சிச் சாலையில்):— இந்தப் படத்தைப் பார்த்தாயா? என்ன விகாரமாயிருக்கிறது? சகிக்கவில்லையே!

மனைவி:—ரொம்ப அழகுதான்! இப்படி வாருங்கள். உங்களுக்குக் கண் பார்வை கொஞ்சம் மட்டு என்று நினைத்துக் கொண்டிருந்தேன்; அது சுத்த மோசம் என்று இப்பொழுதுதான் தெரிகிறது. நீங்கள் பார்த்தது படம் இல்லை; கண்ணுடி!

★

சாக்ஷி:—எனக்கு இப்போது என்ன சொல்லுவதென்றே தெரியவில்லை......

நீதிபதி:—ஏன் அப்படி?

சாக்ஷி:—இந்தக் கூண்டில் ஏறும்போது சத்தியமே பேசுவதாகப் பிரமாணம் செய்தேன். நான் உண்மை பேச வாயைத் திறக்கும் ஒவ்வொரு தடவையும் இந்த வக்கீல்கள் குறுக்கிட்டுக் கெடுக்கிருர்களே!

★

மந்திரவாதி:—இதோ, பாருங்கள் ஸார்! இந்தக் கைக்குட்டைக்குள் உங்கள் கடிகாரம் ஓடும் சத்தம் கேட்கிறது. இப்பொழுது திருப்திதானே?

கடிகாரம் கொடுத்தவர்:—திருப்தி மட்டும் இல்லை; ஒரே ஆச்சரியமாகக்கூட இருக்கிறது. நான் கொடுத்த கடிகாரம் நின்று போய் ஆறுமாத மாகிறது!

"டாக்டர் ஸார்! என் உடம்பைப் பரிசோதிக்க வியாதியின் பெயரைப் புரியும்படியாகச் சொல்லுங்கள். வைத்திய பரிபாஷையில் பெரிய பெயராகச் சொல்லிப் பய முறுத்தாதீர்கள்!"

"சரி, உங்கள் உடம்பில் நல்ல சோம்பேறித்தனம் இருக்கிறது!"

"ஓகோ! சரிதான்! அப்படியானல் வைத்தியப் பரிபாஷையிலேயே நோயின் பெயரைச் சொல்லுங்கள். மனைவியிடம் சொல்லுவதற்குச் சௌகரியமாயிருக்கும்!"

★

வேலைக்காரி:—என் அம்மா, ராத்திரி வயிற்று வலியினல் துடித்துப் போய்விட்டேன் என்கிறீர்களே! என்னை ஒரு குரல் கூப்பிட்டிருக்கக் கூடாதா?

எஜமானி:—நாள் முழுவதும் சிரமப்பட்டு வேலை செய்திருக்கிருயே, அயர்ந்து தூங்கிக் கொண்டிருப்பாய் என்று நான் உன்னைச் சிரமப்படுத்தவில்லை.

வேலைக்காரி:—அதனல் என்ன அம்மா எதற்கும் நீங்கள் என்னை ஒரு குரல் கூப்பிட்டிருக்கலாம். நான் நேற்று ராத்திரி தூங்கின தூக்கத்தில் நீங்கள் கூப்பிட்டிருந்தால்கூட விழித்துக் கொண்டிருக்க மாட்டேன்!



## பார்வைக்கு இரண்டும் ஒரே மாதிரிதான்......
## ஆனால் ஒன்றுக்குப் பெயர் கிடையாது!

தோற்றம் ஒருவரை எவ்வளவோ ஏமாற வைக்கலாம். இரண்டு வாட்சுகளும் பார்ப்பதற்கு ஒன்றுக்கொன்று தாழ்வில்லாமல் தோன்றலாம்! ஆனால் இவைகளின் உழைப்பைக் கவனித்தாலோ பெயருள்ள வாட்சே ஒவ்வொரு தரமும் வெற்றி பெறுகிறது.

சிறந்த வேலைப்பாடும், நம்பகமும், நீடித்த உழைப்பும், அழகிய தோற்றமும், உள்ள வாட்சுகளுக்கு இந்தியாவில் சென்ற 75 ஆண்டுகளுக்கு மேலாக வெஸ்ட் எண்ட் வாட்ச் கம்பெனியார் புகழ் பெற்று விளங்குகிறார்கள். மேற்கண்ட சௌகரியங்களெல்லாம் உங்கள் வெஸ்ட் எண்ட் கெடியாரத்திற்கும் உண்டு. நீங்கள் கொடுக்கும் கிரயத்தையோ பொறுக்கி எடுக்கும் ரகத்தையோ பொருத்ததில்லை.

போதிய ஸ்டாக்குகள் இல்லையெனினும் முடிந்த வரையில் சப்ளை செய்வோம்.

வெஸ்ட் எண்ட் வாட்ச் கோ..
பம்பாய் & கல்கத்தா

**West End Watch Co.**

BOMBAY CALCUTTA

பாக்கெட் வாட்ச்
ஜெனுவின் நிக்கல்
ரூ. 60/-ரோல்ட்
கோல்ட் ரூ.112/-



# நீங்களும் முன்னணிக்கு வாருங்கள்



"நான் கோ-ஆப்டெக்ஸ் ஆடைகளையே உடுக்கிறேன். அவை நாகரீக பொருத்த முடன் சௌகரியமான ஆடைகளாகவும் இருக்கின்றன. நான் முன்னணிக்கு வர அவைகள் ஒரு சாதனமாம்."

## கைத்தறியிலிருந்து நேரே உங்களுக்கு

கோட்டிங்
ஸூட்டிங்
ஷர்ட்டிங்
வேஷ்டி
டவல்
கைகுட்டை

பெயரைப் பார்த்துக் கேளுங்கள்

## கோ-ஆப்டெக்ஸ்

மேன்மையான கைத்தறி ஆடைகள்

**மதராஸ் கைத்தறி நெசவாளர் மாகாண கூட்டுறவு சங்கம் லிட்.**

"ஹாலோவேஸ் கார்டன்ஸ்" 34, பாந்தியன் ரோட்

எழும்பூர் :: மதராஸ்

# குறை இல்லாக் குறை

ஸ்ரீபாத சங்கர்

சாதாரணமாக ஒருவரை ஒருவர் சந்தித்தால்—எங்கு சந்தித்தால் என்ன?—தெரிந்தவர்களாகட்டும், தெரியாதவர்களாகட்டும்—எதைப் பற்றிப் பேச ஆரம்பிக்கிறோம்? குறைகளைப் பற்றித்தான்! சரியான போக்குவரத்துச் சாதனங்கள் இல்லாக் குறை, வேண்டிய உணவு இல்லாக் குறை, துணி இல்லாக் குறை, வீடு இல்லாக் குறை, பெண் குழந்தைகளுக்குச் சரியான வரன்கள் கிடைக்காத குறை, காலேஜில் சேர இடம் கிடைக்காத குறை—இன்னும் எத்தனையோ குறைகளைப் பற்றித்தான்! ஆனால் ஒரு குறையைப் பற்றி மட்டும் அதிகமாகப் பேசுவதுமில்லை, கேள்விப்படுவதுமில்லை. அது என்ன தெரியுமா? குழந்தைகள் இல்லாக் குறைதான்!

இந்த ஒரு குறை மட்டும் இல்லாமலிருப்பதுதான் பல குறைகள் இருந்து வருவதற்குப் பெரிதும் காரணம். ஆனால் இதை ஜனங்கள் சாதாரணமாகக் கவனிப்பதில்லை, தெரிந்து கொள்வதுமில்லை. எல்லாக் குறைகளுக்கும் சர்க்கார் தலையில் பழியைப் போட்டுவிட்டு ஏதோ வாய்க்கு வந்த வார்த்தைகளைப் பேசிவிட்டுக் காலத்தைக் கடத்தி வருகிறார்கள். எப்பேர்ப்பட்ட திட்டங்கள் போட்டாலும் எவ்வளவு பணம் செலவு செய்தாலும் இப்பொழுது ஏற்பட்டு வரும் ஜனப் பெருக்கத்தைக் குறைப்பதற்கு வேண்டிய ஏற்பாடு செய்தாலொழிய எந்தக் குறையையும் பூர்ணமாகத் தீர்க்க முடியாது—ஏன்?

ஜனங்கள் ஆரோக்யமாகவும், குறைகள் இல்லாமலும் வாழ்வதற்கு நல்ல உணவு, உடை, வீடு முக்கியமானவை. மனோ வளர்ச்சிக்குக் கல்வியும், கலை வளர்ச்சியும் தேவை. இவை இன்று குறைந்த ஒரு சிலருக்கு மட்டுமே இருக்கின்றது. ஜனத்தொகை ஏராளமாகப் பெருகிக்கொண்டே போனால் உயர்தர வாழ்க்கை நடத்தவே முடியாது. பசியும், பிணியும், அறியாமையும் பரவத்தான் செய்யும். இன்று நமக்குக் கொடுக்கப்படும் ரேஷன் பாதி வயிற்றுக்குத்தான் போதும். ரேஷனே இல்லாத சில இடங்களில் பலர் பட்டினியாகவே இருக்கிறார்கள். கோடிக் கணக்கான பணம் செலவழித்து வெளி நாடுகளிலிருந்து உணவுப் பொருள்களை இறக்குமதி செய்துவரும் இந்த நாளில், இப்பொழுது இருக்கும்படியான ஜனங்களின் கதியே இப்படி இருக்கிறதென்றால் ஜனப்பெருக்கம் குறைந்தாலொழிய வேறு எந்த விதத்திலும் இதைச் சரிக்கட்ட முடியாது.

வேறு எல்லாத் தொழில்களிலும் ஸ்டிரைக் செய்கிறார்கள்; உற்பத்தியைக் குறைக்கிறார்கள். ஆனால் ஜனப் பெருக்கத்துக்கு ஸ்டிரைக் செய்கிறதேயில்லை!

பொறுப்புணர்ந்த எந்தத் தாய் தந்தையர்களும் இரண்டு அல்லது மூன்று குழந்தைகளுக்கு மேல் விரும்ப மாட்டார்கள். பணமிருந்தால் மட்டும் போதாது; குழந்தைகளைச் சரியான முறையில் வளர்ப்பதற்கு உற்சாகமும், திறமையும், பொறுப்பும், பொறுமையும் மிகவும் வேண்டும். குழந்தைகள் அதிகமாக இருந்தால் ஒருவரையும் சரியாகக் கவனிக்க முடியாமற் போய்விடும். அவர்களுடைய வளர்ச்சிக்குக் குந்தகம் ஏற்படும். குழந்தைகளைப் பெற்றுவிட்டுக் கடவுள் காப்பாற்றுவார் என்று சொல்லும் காலம் இது அல்ல. இதை நாம் தெரிந்துகொள்ளவே உணவுப் பஞ்சம் ஏற்பட்டிருக்கிறது.

இப்பொழுது கலியாண வயது பெண் குழந்தைகளுக்குப் பதினைந்தும், ஆண் குழந்தைகளுக்கு இருபதுமாக இருப்பதைப் பதினெட்டும், இருபத்திரண்டுமாகச் செய்துவிட்டால் இந்த மூன்று வருஷ வித்தியாசத்தில் பிறக்கக்கூடிய பல லக்ஷம் குழந்தைகள் குறைந்துவிடும். ஆண்களாகட்டும், பெண்களாகட்டும் இரண்டாம் கலியாணம் செய்துகொள்ளாமல் இருக்கலாம். நோயாளிகளும், குடும்ப சம்ரக்ஷணை செய்ய முடியாதவர்களும் கலியாணம் செய்து கொள்ளக் கூடாது. குழந்தைகள் வேண்டாமென்று நினைக்கிற தம்பதிகளுக்கு வேண்டிய யோசனைகளையும், சாதனங்களையும் சுலபமாகக் கிடைக்கும்படி செய்தல் வேண்டும். இவை சர்க்காரும் கார்ப்பரேஷனும் செய்ய வேண்டிய வேலைகள்.

நல்ல காரியத்தைச் செய்யும்போது அபிப்பிராய பேதத்திற்குப் பயந்துவிடக் கூடாது. நாளடைவில் ஆதரவு தானாகவே கிடைக்கும். குழந்தைகள் ஒரு பாவமும் செய்யவில்லை. குழந்தைகளை உற்பத்தி செய்து வறுமையில் வாடவைப்பதோ கஷ்டப்படச் செய்வதோ பொறுப்பற்ற செய்கையாகும். சமுதாயத்திற்கு இழைக்கும் பெருந் தீங்குமாகும். சுதந்திர இந்தியாவில் வாழும் ஜனங்கள் இதில் கவனம் செலுத்த வேண்டும்.

வாழ்க, பாரத சமுதாயம்!



## பழனித்தல வரலாறும் திருக்கோயில் வழிபாடும்

கலியுகத்திலே கண்கண்ட தெய்வமாக விளங்கும் முருகப்பெருமான் எழுந்தருளியிருக்கும் புண்ணிய க்ஷேத்திரங்களில் பழனியும் ஒன்று. தொன்மை மிக்க பழனித் திருக்கோயிலின் வரலாற்றைச் சைவத் திருவாளர் ஸ்ரீ ஜெ. எம். சோமசுந்தரம் பிள்ளை இந்நூலில் ரசமாக எழுதியிருக்கிறார். அத்துடன், ஆலயம் செல்லும் பக்த கோடிகள் தெய்வத்தை எவ்வாறு பயபக்தியுடன் வழிபட வேண்டுமென்பதையும் விளக்கியுள்ளார். ஸ்ரீ சோமசுந்தரம் பிள்ளை முன்பு இக்கோயிலின் நிர்வாக அதிகாரியாக இருந்து பல முக்கிய சீர்திருத்தங்களைச் செய்து அடியார்களின் பாராட்டைப் பெற்றவர்; தமிழ் நாட்டுக் கோயில்களின் சிறப்பையும் புகழையும் பரப்புவதையே முக்கிய லட்சியமாகக் கொண்டு உழைத்து வருபவர். பழனியம்பதிக்குச் சென்று தண்டாயுத பாணியை வழிபட விரும்பும் பக்தர்களுக்கு இந்நூல் மிக்க உபயோகமாக இருக்கும். விலை ரூ. 1. பிரசுரம்: சைவ சித்தாந்த சபை, பழனி.

ஒரு திருத்தம்:—சென்ற 12-ம் தேதி "கல்கி" இதழ் அட்டையில் ஒரு வட்டத்துக்குள்ளே வெளியாகியிருக்கும் ரதம் வெள்ளி ரதம் என்று அட்டைப்பட விளக்கத்தில் எழுதப்பட்டிருந்தது. இந்தப் புத்தகத்தைப் படித்த பிறகு அது வெள்ளி ரதம் அல்ல, தங்க ரதம் என்று தெரிந்து மேலும் பிரமிக்க வேண்டி வருகிறது!

## கூலி

வாழ்க்கைப் போரில் ஈடுபட்டு, அந்தப் போரிலேயே மடியும் ஒரு கூலிச் சிறுவனின் கதை இது. சமூகத்தின் கீழ்த் தட்டில் இருந்து கொண்டு உயர் வாழ இடைவிடாது போராடும் ஒரு வர்க்கத்தின் பிரதிநிதியாக விளங்கிய இச்சிறுவன் மாமனின் உதவியால் நகரத்துக்குச் சென்று ஒரு உத்தியோகஸ்தர் வீட்டில் வேலைக்கு அமருகிறான். அந்த வீட்டு எஜமானி ஈரமில்லாத நெஞ்சினள். அவள் சிறுவனைப் பலவிதமான கொடுமைகளுக்கு ஆளாக்குகிறாள். அந்தத் தாங்கொணாத் துன்பத்திலிருந்து விடுபட்டு, மூட்டை தூக்கிப் பிழைக்க ஆரம்பித்துப் பிறகு ஒரு தொழிற்சாலையில் வேலைக்கு அமருகிறான். பிறகு அங்கிருந்து விடுபட்டு பம்பாய்ப் பட்டணத்துக்குச் சென்று அங்கு ஒரு துரைசானியம்மாளிடம் வேலைக்கு அமருகிறான். ரிக்‌ஷா இழுக்கிறான்; பாத்திரம் கழுவுகிறான்; வீடு கூட்டுகிறான்; அவ்வப்போது உதைபடுகிறான். கடைசியில் நோய்வாய்ப் படுகிறான். சிறுவன் வாழ்க்கை அத்துடன் முடிவடைகிறது.

இந்தக் கதையில் காதல் இருக்கிறதா? நெஞ்சைப் பிளக்கும் சோகம் இருக்கிறதா? அன்பு இருக்கிறதா? அநுதாபம் இருக்கிறதா? சிந்தனைக்கு விருந்து இருக்கிறதா? என்று கேட்டால் இருக்கிறது, எல்லாம் இருக்கிறது என்றுதான் பதில் கூறமுடியும்.

விலை ரூ 5; மூல ஆசிரியர்: மூல்க்ராஜ் ஆனந்த்; மொழிபெயர்ப்பு: ஆர். ராமநாதன்; பிரசுரம்: புதுமைப் பதிப்பகம், காரைக்குடி.

## மாமல்லபுரம்

தமிழகத்திலுள்ள சரித்திரப் பிரசித்தி பெற்ற இடங்களில் மாமல்லபுரம் ஒன்று. மாமல்லபுரத்துச் சிற்பங்களைப் பாராதவர்களைப் பழந்தமிழ் நாட்டுப் பண்பாட்டை அறிந்தவர்கள் என்று சொல்ல முடியாது. மாமல்லபுரத்துக்குச் சென்று தமிழ்நாட்டின் உன்னத கலைப் பொக்கிஷங்களைக் காண விரும்பும் கலைஞர்களுக்கும் ரசிகர்களுக்கும் உதவியாயிருக்கக்கூடிய ஒரு வழிக் குறிப்புப் புத்தகத்தை வேம்பு, ஸுபா என்ற இரு இளைஞர்கள் எழுதியிருக்கிறார்கள். மாமல்லபுரத்தின் வரலாறு, அங்குள்ள சிற்பங்கள் எவை எவை, அவற்றில் உள்ள சிறப்புகள் யாவை என்பதையெல்லாம் இந்தப் புத்தகம் தெளிவாக விளக்குகிறது. எழுத்தில் மட்டுமல்ல; படங்களுடன் கூடத்தான்.

இப்போது சென்னை சர்க்கார் மாமல்லபுரத்துக்குச் சென்னையிலிருந்து பஸ் விடுகிறார்கள். இந்தப் புத்தகத்தை ஒரு தடவை படித்துவிட்டு மேற்படி பஸ்ஸில் ஏறி மாமல்ல புரத்துக்குப் போனால் போதும். பாக்கிக் கதையை அந்தச் சிற்பங்களே வாய் திறந்து சொல்லிவிடும். விலை அணா 8. பிரசுரம்: சுடர் பதிப்பகம், தாம்பரம்.




# யாருக்கு வெற்றி ?

ராஜ்

ஒரு காட்டில் முயல் ஒன்று இருந்தது. அது மிகவும் புத்திசாலி. துஷ்ட மிருகங்கள் இருக்கும் இடத்திற்கே அது போகாது முயல் வழவழவென்று வளர்ந்திருந்ததினால் மற்ற துஷ்ட மிருகங்கள் யாவும் அதன் மீது ஒரு கண் வைத்திருந்தன.

ஒரு நாள் அந்த முயல் இரை தேடுவதற்காகத் தன்னுடைய இருப்பிடத்தை விட்டு வெகு தூரம் போய் விட்டது. ஆகவே, அதற்கு வீட்டுக்குத் திரும்பிப் போக வழி தெரியவில்லை; தவித்தது. அப்பொழுது அருகிலிருந்த ஒரு புதரில் படுத்துக் கொண்டிருந்த சிங்கம் முயலைப் பார்த்து ஒரு கர்ஜனை செய்தது. போதாக் குறைக்கு ஒரு ஓநாயும் முயலைப் பார்த்துவிட்டது.

பாவம், முயல் என்ன செய்யும்! தைரியத்தை வரவழைத்துக் கொண்டு நாலு கால் பாய்ச்சலில் ஓட ஆரம்பித்தது. முயலைத் துரத்திக்கொண்டு சிங்கமும் ஓநாயும் ஓடி வந்தன. துஷ்ட மிருகங்கள் கிட்ட நெருங்க நெருங்க முயல் ஒன்றும் தோன்றாமல் தவித்தது. "ஒளிந்து கொள்ள ஒரு இடமும் காணவில்லையே! இனிமேல் என் உயிருக்கு ஆபத்துத்தான்!" என்று முயல் நினைத்த சமயத்தில் அதன் கண்களுக்கு ஒரு சிறிய பொந்து தென்பட்டது. முயலுக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. சரேலென்று அந்தப் பொந்துக்குள் நுழைந்து அது பதுங்கிக் கொண்டது.

ஓடிக்கொண்டேயிருந்த முயல் திடீரென்று பொந்துக்குள் நுழையவே சிங்கத்துக்கும் ஓநாய்க்கும் ஒன்றும் விளங்கவில்லை. இரைக்க இரைக்க ஓடி வந்து பொந்தின் எதிரில் நின்று கொண்டு விழித்தன.

"உன்னால்தான் நான் அதை விட்டு விட்டேன்!" என்று சிங்கம் ஓநாய் மீது குற்றம் சாட்டியது.

ஓநாய் சும்மா இருக்குமா? "உன்னால்தான் நான் அதை விட்டு விட்டேன்!" என்று அதுவும் பதிலுக்குச் சிங்கத்தின்மீது குற்றம் சாட்டியது.

சற்று நேரத்துக்கெல்லாம் வாய்ப் பேச்சு வலுத்து ஒன்றுக்கொன்று சண்டை யிட்டுக் கொள்ள ஆரம்பித்து விட்டன.

இதைக் கவனித்த முயல் "சிநேகிதர்களே, நீங்கள் ஏன் ஒருவருக்கொருவர் சண்டையிட்டுக் கொள்ளுகிறீர்கள்? நானோ ஒரு சின்ன முயல். உங்களில் ஒருவருடைய கடைவாய்க்குக்கூட நான் காணமாட்டேன். என்னை யாராவது ஒருவர் மட்டும் எடுத்துக் கொள்ளுங்கள்!" என்று சொல்லவே, சிங்கமும் ஓநாயும் சண்டையை நிறுத்தி விட்டன.

"முயல் சொல்லுவது வாஸ்தவம் தான். ஆனால் நமக்குள் யார் முயலை எடுத்துக்கொள்வது?" என்று சிங்கம் ஒரு சந்தேகத்தை எழுப்பியது.

முயல் பொந்துக்குள் இருந்து கொண்டே "சிநேகிதர்களே, நான் சொல்லுவதைக் கேளுங்கள்! இரண்டு பேரும் வட்டமாகப் பொந்தைச் சுற்றி வளைந்து நில்லுங்கள். ஒருவர் வாலை ஒருவர் வாயினால் பிடித்துக் கொள்ளுங்கள். அப்படியே சுற்றிச் சுற்றி












வாருங்கள். யார் களைப்படையாமல் வெகு நேரம் சுற்றி வருகிறீர்களோ அவர்கள் என்னை அடையட்டும்!'' என்று சொல்லவே சிங்கமும் ஓநாயும் ''பேஷ், பேஷ்! சரியான யோசனை!'' என்று சம்மதித்தன.

'நான்தான் அதிக பலமுள்ளவன். நான்தான் சளைக்காமல் சுற்றிச் சுற்றி வருவேன். எனக்குத்தான் முயல்!' என்று சிங்கம் நினைத்துக் கொண்டது.

'என்னை விட வேகமாகச் சிங்கத்தால் சுற்ற முடியாது. நான் களைப்படையாமல் வெகு நேரம் சுற்றி வருவேன். எனக்குத்தான் முயல்!' என்று நினைத்தது ஓநாய்.

பிறகு சிங்கமும், ஓநாயும் வெகு நேரம் பொந்தைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தன. இரண்டு மிருகங்களும் சிறிது நேரத்துக்கெல்லாம் மிகவும் களைப்படைந்து விட்ட போதிலும் முயலை எப்படியாவது அடைய வேண்டும் என்ற ஆத்திரத்தில் பிடிவாதமாகச் சுற்றிச் சுற்றித் தள்ளாடித் தள்ளாடி நகர்ந்து கொண்டிருந்தன.

முயலுக்கு ஆனந்தம் தாங்கவில்லை. ''சிநேகிதர்களே, நீங்களோ களைப்பு மேலிட்டாலும் பிடிவாதமாகச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருக்கிறீர்கள்! இப்படியே இருந்தால் நீங்களும் ஒரு முடிவுக்கு வர முடியாது; நானும் இந்தப் பொந்தில் இருந்து சாக வேண்டியதுதான்! இதிலிருந்து வெற்றி பெற ஒரு யுக்தி சொல்லுகிறேன். இந்தப் பொந்திலிருந்து ஒரே ஓட்டமாக இப்பொழுது ஓடுகிறேன். நீங்கள் இருவரும் என்னைப் பின்பற்றி ஓடி வாருங்கள். யார் என்னை முதலில் பிடித்து விடுகிறீர்களோ அவர்கள் என்னை எடுத்துக் கொள்ளட்டும்!'' என்று சொல்லி முயல் தான் ஒளிந்து கொண்டிருந்த பொந்திலிருந்து வெளியே வந்து நாலு கால் பாய்ச்சலில் ஓடிற்று.

முயல் ஓடுவதைப் பார்த்த சிங்கமும் ஓநாயும் என்ன செய்யும்? அவைதான் பொந்தைச் சுற்றிச் சுற்றி வந்து களைப்படைந்து விட்டனவே! எப்படி ஓட முடியும்? இரண்டும் முகத்தில் அசடு வழிய, தங்களை ஏமாற்றிய முயலின் யுக்தியை மெச்சிக் கொண்டன!

# சுதந்திர மாளிகை



ஜெயமணி

## 8. பார்லிமெண்டின் அதிகாரங்கள்

**மசோதாக்கள்:**- பண சம்பந்தமான மசோதாக்களைத் தவிர, வேறு எந்த மசோதாவையும் பார்லிமெண்டிலோ அல்லது ராஜாங்க சபையிலோ கொண்டு வரலாம். ஆனால், பண சம்பந்தமான அதாவது நிதி மசோதாக்களைப் பார்லிமெண்டில் மாத்திரமே கொண்டுவர வேண்டும், ராஜாங்க சபையில் கொண்டு வரக் கூடாது.

நிதி மசோதா பார்லிமெண்டில் நிறைவேறியபின், ராஜாங்க சபைக்கு அனுப்பப்படும். ராஜாங்க சபை தன்னுடைய சிபார்சுகளுடன் பதினாலு நாட்களுக்கு முன் அந்த மசோதாவைத் திருப்பவும் பார்லிமெண்டுக்கு அனுப்பிவிட வேண்டும்.

அந்தச் சிபார்சில் எல்லாவற்றையுமோ அல்லது சிலவற்றை மாத்திரமோ நிராகரிக்கப் பார்லிமெண்டுக்கு அதிகாரம் உண்டு.

ராஜாங்க சபையின் சிபார்சுகளைப் பார்லிமெண்டு அங்கீகரித்தாலும், அங்கீகரிக்காவிட்டாலும் நிதி மசோதா இரு சபைகளிலும் நிறைவேறி விட்டதாகவே கருதப்படும். பார்லிமெண்டு அங்கீகரிக்கும் சிபார்சுகளின்படி மேற்படி மசோதா திருத்தப்பட்டு நிறைவேறும்.

நிதி மசோதாவை ராஜாங்க சபை மேலே குறிப்பிட்ட காலத்துக்குள் திருப்பி அனுப்பாவிட்டால், அந்தக் கெடு முடிந்தவுடனே அந்த மசோதா இரு சபைகளிலும் நிறைவேறியதாகக் கருதப்படும்.

குறிப்பிட்ட மசோதா நிதி மசோதாவா அல்லவா என்ற கேள்வி எழுமாயின், அதையொட்டிப் பார்லிமெண்டு சபாநாயகரின் தீர்ப்பே முடிவானது.

நிதி மசோதாவைத் தவிர வேறு எந்த மசோதாவும் இரு சபைகளினாலும் அங்கீகரிக்கப்பட வேண்டும். இல்லாவிடில் அது நிறைவேறியதாகக் கருதப்பட மாட்டாது.

ஒரு சபையில் நிறைவேறிய மசோதாவை மற்றொரு சபை நிராகரித்தாலும், திருத்தங்கள் விஷயத்தில் இரு சபைகளுக்கும் அபிப்பிராய பேதம் ஏற்பட்டாலும், அல்லது மசோதா ஆலோசனைக்கு வந்து ஆறுமாத காலம் ஆகிவிட்டாலும், அந்த மசோதாவை யொட்டி விவாதிப்பதற்காகக் குடியரசுத் தலைவர் இரு சபைகளும் அடங்கிய கூட்டத்தைக் கூட்டலாம்.

அந்தக் கூட்டத்திலுள்ள அங்கத்தினர்களில் பெரும்பாலோர் ஆதரித்து வோட்டுக் கொடுப்பார்களாயின், மசோதா நிறைவேறிவிடும்.

நிதி மசோதாவைத் தவிர இரு சபைகளிலும் நிறைவேறிய வேறு மசோதா குடியரசுத் தலைவரின் அங்கீகாரத்துக்காக அவரிடம் சமர்ப்பிக்கப்பட வேண்டும். அவர் மேற்படி மசோதாவைப் புனராலோசனை செய்யும்படி மீண்டும் திருப்பி அனுப்பலாம். அல்லது குறிப்பிட்ட சில திருத்தங்கள் செய்யும்படி கூறலாம். அவருடைய கட்டளைக்கு இணங்க, இரு சபைகளும் அவ்வாறே புனராலோசனை செய்ய வேண்டும்.

எனினும், குடியரசுத் தலைவர் குறிப்பிட்ட திருத்தங்களை மேற்படி சபைகள் ஏற்றுக் கொண்டாலும் ஏற்றுக்கொள்ளாவிட்டாலும், இரண்டாவது தடவையாக அந்த மசோதாவை அங்கீகரிக்க மறுக்கும் அதிகாரம் தலைவருக்கு இல்லை.

பிரதி வருஷமும் இந்திய சர்க்காரின் அந்தந்த வருஷத்திய வரவு செலவுத் திட்டத்தை இரு சபைகளிலும் சமர்ப்பிக்கும்படி குடியரசுத் தலைவர் பார்த்துக் கொள்ள வேண்டும்.

தலைவருடைய சிபார்சைப் பெற்ற பிறகுதான் மானியத் தொகை கோரிக்கைகளை மந்திரி பார்லிமெண்டில் தீர்மானம் கொண்டு வரலாம்.

நிதி மசோதாவை யொட்டி பார்லிமெண்டில் என்ன நடவடிக்கைகள் அனுசரிக்கப்படுகின்றனவோ, அதே நடவடிக்கைகளே மாகாண சட்டசபைகளிலும் அனுசரிக்கப்பட வேண்டும்.

சுப்ரீம் கோர்ட் அல்லது ஹைகோர்ட் நீதிபதிகளின் நடத்தையைப் பற்றி பார்லிமெண்டில் எவ்வித விவாதமும் நடைபெறக் கூடாது. எனினும் குறிப்பிட்ட நீதிபதியைப் பதவியிலிருந்து அகற்றும்படி குடியரசுத் தலைவரிடம் விண்ணப்பம் சமர்ப்பிக்க வேண்டும் என்று தீர்மானம் கொண்டு வந்து விவாதிக்கலாம்.

அவர்களுடைய நடத்தையைப் பற்றி விவாதிக்க மாகாண சட்டசபைகளுக்கும் அதிகாரம் இல்லை.

சட்டசபைகளின் நடவடிக்கைகளைப் பற்றி விசாரிக்க கோர்ட்டுகளுக்கு அதிகாரம் இல்லை.

மாகாண சட்டசபைகளின் அதிகாரத்துக்கு ஒதுக்கி வைத்துள்ள விஷயங்களை யொட்டியும், தேச நலனை முன்னிட்டு மாகாணங்களுக்காகச் சட்டம் செய்ய பார்லிமெண்டுக்கு அதிகாரம் அளிக்கப் பட்டிருக்கிறது. ஆனால், அவ்விஷயமாக ராஜாங்க சபையில் வரும் தீர்மானம் மூன்றில் இரண்டு மடங்கு அங்கத்தினரின் ஆதரவைப் பெற்று நிறைவேற வேண்டும். அந்தத் தீர்மானத்தை அடிப்படையாகக் கொண்டே பார்லிமெண்டில் சட்டம் நிறைவேற வேண்டும்.

ராஜாங்க சபையில் நிறைவேறும் மேற்படி தீர்மானம் ஒரு வருஷ காலம் வரையில்தான் அமுலில் இருக்கும். பிறகு அந்தக் கால கெடுவை நீடிக்கலாம். அந்தத் தீர்மானத்தின் கால கெடு முடிந்ததிலிருந்து ஆறுமாத காலத்துக்குத்தான் மாகாணங்களுக்காகப் பார்லிமெண்டு நிறைவேற்றும் சட்டம் அமுலில் இருக்கும். அதன்பின் அந்தச் சட்டம் காலாவதி யாகிவிடும்.

சுப்ரீம் கோர்ட்டு அமைப்பு, அதிகார எல்லை முதலிய சுப்ரீம் கோர்ட்டு சம்பந்தமான எந்த விஷயத்தையும் ஒட்டிச் சட்டங்கள் நிறைவேற்ற பார்லிமெண்டுக்கு மாத்திரமே அதிகாரம் உண்டு.

புதிய கோர்ட்டுகளை ஏற்படுத்தவும் பார்லிமெண்டுக்கு அதிகாரம் அளிக்கப் பட்டிருக்கிறது.

பார்லிமெண்டில் நிறைவேறிய சட்டத்துக்கும் மாகாண சட்டசபைகளில் நிறைவேறிய சட்டத்துக்கும் முரண்பாடு இருக்குமாயின் அத்தகைய சந்தர்ப்பங்களில் பார்லிமெண்டு சட்டமே செல்லுபடி யாகும்.

பார்லிமெண்டிலோ, மாகாண சட்டசபைகளிலோ நிறைவேறும் சட்டத்துக்குக் குடியரசுத் தலைவரின் அல்லது கவர்னரின் சம்மதம் முறையாக பெறப்படவில்லை என்பதற்காக அந்தச் சட்டம் செல்லுபடியாகாமல் போய்விடாது.

எந்த மாகாணத்தின் நிர்வாக அதிகாரமும் பார்லிமெண்டின் சட்டத்துக்கு அல்லது இந்திய சர்க்கார் நிர்வாக அதிகாரத்துக்கு முரணாக இருக்கக் கூடாது.

பார்லிமெண்டுக்குச் சட்டம் செய்ய அதிகாரம் இல்லாத விஷயமாயினும், அதை யொட்டிப் பார்லிமெண்டு சட்டம் செய்யலாம் என்று இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மாகாண சட்ட சபைகள் தீர்மானிக்குமாயின், அவ் விஷயமாகச் சட்டம் கொண்டு வந்து நிறைவேற்றும் அதிகாரம் பார்லிமெண்டுக்கு அளிக்கப் பட்டிருக்கிறது.

இந்தியா முழுதும் கடற் படை, தரைப் படை, ஆகாயப் படை சம்பந்தமான போக்கு வரவுப் பாதைகளை நிர்ணயிக்கவும் நிர்மாணிக்கவும் பார்லிமெண்டுக்குப் பூரண அதிகாரம் உண்டு. மற்றும் அவ் விஷயமாகப் போக்குவரவுப் பாதைகளை நிர்மாணிக்கும்படியும் அவற்றைப் பராமரிக்கும்படியும் மாகாண சர்க்கார்களுக்குக் கட்டளைகள் பிறப்பிக்கவும் பார்லிமெண்டுக்கு அதிகாரம் உண்டு.

மாகாண அசெம்பிளி, கவுன்சில் அங்கத்தினர்களின் சம்பளம், அலவன்ஸ் முதலியவற்றை அப்போதைக் கப்போது நிர்ணயிக்க அந்தந்த மாகாணச் சபைகளுக்கு அதிகாரம் உண்டு. அவ்வாறு நிர்ணயிக்கப்படும் வரையில், இந்த அரசியல் திட்டம் அமுலுக்கு வருமுன் அவர்களுக்கு என்ன சம்பளமும் அலவன்சும் உண்டோ அதேபோல் கொடுக்கப்பட்டு வரும்.

---



புதுடில்லி புகைப்பட நிருபர் ஸ்ரீ கே. நடராஜன் அவர்களின் சகோதரி ஸ்ரீமதி கே. பட்டம்மாளுக்கும் முள்ளங்குடி மிராசுதார் ஸ்ரீ ஆர் மகாலிங்கத்துக்கும் மாயவரத்தின் மணமகள் இல்லத்தில் மிகவும் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது.

வாழ்க பட்டம்மாள்- மகாலிங்கம்!

# மூன்று வருஷங்களுக்குப் பின்...

ரா. வீழிநாதன்

"**நீ**ங்களா, சீல் பாபு?"

ஐந்து வருஷங்களுக்குப் பின் ஒலித்த அந்தக் குரல் அவனுடைய மனதை என்னவோ செய்தது.

அவன் மௌனமாக நின்றுகொண்டிருந்தான். ஒரு காலத்தில் மிகவும் நெருங்கிப் பழகிய ஆசாவுக்கெதிரே அன்று அவன் அறிமுகமற்றவன் போல நின்றுகொண்டிருக்கவேண்டியிருந்தது. "ஆம்" என்ற ஒரு சொல்லைத் தவிர அவன் வாயினின்றும் வேறொரு சொல்லும் எழவில்லை.

"இன்று இந்தப் பக்கம் எங்கே வந்தீர்கள்?"

"சும்மா உன்னைப் பார்த்துப் போவதற்காகத்தான்."

அவன் ஏதோ நினைவில் அப்படிச் சொல்லிவிட்டான். ஆனால் அடுத்த கணமே அம்மாதிரியான சொற்களை உபயோகிப்பது—அதுவும் விவாகமான பெண்ணைப் பொறுத்தவரை அவதூறுக்கிடமாகும் என்பது அவனுக்கு நினைவுக்கு வந்தது. அவன் அவளுக்கு என்ன வேண்டும்? ஏதோ பால்ய நண்பன். அவ்வளவு தானே!

பல பேருக்கு மத்தியில் தன்னை யாரோ அவமானப்படுத்தியது போலத் தோன்றியது அவளுக்கு. அவளுடைய குழிந்த சிவந்த கன்னங்கள் இன்னும் அதிகமாகச் சிவந்தன.

"ஒரு விஷயம் கேட்கலாமா?"

சீல் பாபு உட்கார்ந்துகொண்டே அவளைப் பார்த்துக் கேட்டான்.

"கேட்க வேண்டிய அவசியம்?"

அவள் குரலில் கொஞ்சம் கடுகடுப்புத் தொனித்தது.

"ஏனெனில் அந்தக் கேள்வியின் பதிலைப் பொறுத்துத்தான் என் வாழ்க்கையில் சுகமோ துக்கமோ அடைய முடியும்!"

"ஓகோ, அப்படியா?"

"ஆமாம்."

"சரி, அப்படியானால் உங்கள் கேள்விக்கு, நீங்கள் கேட்காமலேயே நான் பதில் சொல்லிவிடுகிறேன்."

"உன்னால் சொல்ல முடியாது, ஆசா!"

"இல்லை. என்னால் சொல்ல முடியும். நான் உங்களைக் காதலிக்க முடியாது. ஏனெனில் நான் விவாகமானவள்."

சாய்வு நாற்காலியில் சாய்ந்திருந்த சீல் பாபுவின் கால்கள் சங்கோசம், வருத்தம் வெறுப்பு இவற்றினால் நடுங்கத் தொடங்கின. அவனால் வாய் திறந்து பேச முடியவில்லை. ஆனால் ஆசா மேலும் சொல்லிக்கொண்டே போனாள்: "கல்யாணம் ஆகாமல் காதலிப்பதும் ஒரு விதத்தில் மானஸிக விபசாரமாகும்."

"எனக்கு அது தெரியும். ஆனால்..."

"ஆனால் என்ன?"

"நான் கேட்க நினைத்தது வேறு"

"அதென்ன?"

ஆசா ஆதுரத்துடன் கேட்டாள்.

"ஆமாம். இந்த டாக்டர் உன்னை..."

நாணமுற்ற ஆசாவின் நீண்ட விழிகள் பலவீனமான அவனுடைய முகத்தை ஒரு முறை ஏறிட்டுப் பார்த்தன. பிறகு தானாகவே தரையை நோக்கலாயின.

சீல் பாபு மறுபடியும், "காமமில்லாத காதல் ஒன்று இருப்பதாக உங்கள் விவேக புத்திக்கு எட்டவேயில்லையல்லவா?" என்று கேட்டான்.

தோல்வியே கண்டறியாத ஆசாவினால் வெட்கத்தை விட்டு இத்தடவை தன்னைச் சமாளித்துக் கொள்ள முடியவில்லை. அவள் கட கட வென்று நகைத்தாள்.

• • •

**ஐ**ந்து வருஷங்களுக்கு முன்பு அவர்கள் மசூரியில் இருந்தனர்.

ஒருநாள் காலைப்பொழுது வானம் தனிச் சோபையுடன் விளங்கியது. அவ்வளவு எழிலுடன் காட்சியளித்த அந்தக் காலையின் மாலை இன்னும் எவ்வளவு எழிலுடனிருந்திருக்குமோ, தெரியாது. அவன் ஜன்னலருகே உட்கார்ந்து ஏதோ எழுதிக்கொண்டிருந்தான். ஜன்னலுக்கு வெளியே இயற்கையின் காதல் நாடகம் எப்பொழுதும் போலவே நடந்துகொண்டிருந்தது.

"மேகம் ஓடியது, ஓடிப் போய்த் தலை நிமிர்ந்து நின்றுகொண்டிருந்த மலையரசனின் சிகரத்தைப் பிடித்துக் கொண்டது. சிறிது நேரத்துக்கெல்லாம் மலையரசனின் சிகரம் மறைந்துவிட்டது. மலையிலிருந்து இறங்கிய அருவி 'சலசல' சப்தத்துடன் கீழ் நோக்கி ஓடி ஒரு பெரிய பள்ளத்தில் ஐக்கிய மடைந்து விட்டது."

இவ்வாறு எழுதிக்கொண்டிருந்த அவன் அதை நிறுத்திவிட்டுத் திடீரென்று

தன்னுடைய ‘டயரி’யில் ஏதோ குறித்துக் கொண்டான்.

“காதலுக்கு இரண்டே இரண்டு முக்கியமான முடிவுதான் உண்டு.”

அவள் மெதுவாகப் பின்புறமாக வந்து தனது தளிர்க் கரங்களால், அவனுடைய கண்களை இறுகப் பொத்தினாள். அவன் அந்தக் கைகளை மெதுவாகத் தொட்டுத் தடவிப் பார்த்தான். ஆகா! எவ்வளவு மிருதுவான கரங்கள்! அந்தக் கர ஸ்பரிசத்தில்தான் என்ன சுகம்! இன்றும் அதை நினைத்தாலே மனம் புல்லரிக்கிறது. அவன் அந்தக் கைகளை நகர்த்தவே முயற்சிக்கவில்லை. ஆனால் சிறிது நேரத்துக்கெல்லாம அவளாகவே சிரித்துக்கொண்டு அவனெதிரே வந்து நின்றாள். “சில் பாபு! என்னை அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லையல்லவா?—ஆமாம், என்ன எழுதிக்கொண்டிருக்கிறீர்கள்?” என்று அவள் தன் தேமதுரக் குரலில் கேட்டாள்.

“ஒன்றும் இல்லை!” என்று அவன் அலட்சியமாகப் பதில் சொன்னான்.

“சொல்லமாட்டீர்களா, சில் பாபு?” என்று கேட்ட வண்ணமே அவள் அவனருகில் [illegible] உட்கார்ந்தாள்.

“ஊஹூம்!”

“அதெல்லாம் முடியாது. சொல்லித்தான் ஆகவேண்டும்” என்று குறுநகையுடன் அவள் பிடிவாதம் பிடித்தாள்.

கடைசியில் அவன் அவளுக்கு அந்த டயரியையே எடுத்துக் காண்பித்துவிட்டான்.

“மனிதனுடைய மிகப் பெரிய பலவீனம் காதல்தான். தேவதைகள் மனிதனுக்கு அளித்த பெரிய சாபமும் அதுவே” என்று அதில் எழுதியிருந்தது.

“பொய்!”

ஆசா அழுத்தந் திருத்தமாக இந்த ஒரே ஒரு வார்த்தையை மட்டும் சொன்னாள்.

* * *

அப்படிக் ‘கட கட’ வென்று நகைத்த ஆசாவுக்குத் திடீரென்று ‘என்ன இருந்தாலும் சில் பாபு இன்று விருந்தாளி. அவரை உபசரிப்பதுதான் நமது கடமை’ என்று தோன்றியது. உடனே அவள் தன் குரலில் சாந்தத்தை வரவழைத்துக் கொண்டு, “டீ கொண்டு வரச் சொல்லட்டுமா?” என்று கேட்டாள். அந்தக் கேள்விக்கு அவன் ஏதாவது பதில் சொல்லுவான் என்று அவள் எதிர்பார்த்தாள். ஆனால் பழைய நினைவுகளில் ஊறிக்கொண்டிருந்த சில் பாபு வாய் திறந்து ஒன்றும் சொல்லவில்லை.

‘விவேகத்துக்கும் காதலுக்கும் என்ன சம்பந்தம்? ஒன்று இருக்கும் பொழுது இன்னொன்றுக்கு இடம் ஏது? காதலோ, விவேகமோ இரண்டிற்குள் ஒன்றுதானே இருக்க முடியும்? அப்படியிருக்கும் பொழுது, காதலும் காமமும் ஒன்றா அல்லது வெவ்வேறானவையா? என்று யோசிக்க யாருக்குப் பொழுதிருக்கிறது?’

இவ்வாறு சிந்தித்தவாறு ஆசா தேநீர் கொண்டுவர உள்ளே சென்றாள்.

“பேஷ்! ரொம்ப நன்றாயிருக்கிறது! உண்மையைக் கண்




நிற்பவர்:—ஏன், ஸார்! என்னத்திற்காக நீங்கள் இவ்வளவு கூட்டத்தில் இப்படி முண்டியடித்துக் கொண்டு பஸ்ஸில் ஏறுகிறீர்கள்?

ஏறுகிறவர்:—நான் என் வீட்டுக்கு நடந்தே போய் விடலாம், ஸார்! ஆனால் தினசரி ஏதாவது Exercise (தேகாப்பியாசம்) செய்யவேண்டுமென்று டாக்டர் சொல்கிறார். அதற்காகத்தான் பஸ்ஸில் ஏறுகிறேன்!

# இரு மடங்கு




முதல் ஆசிரியர் :—தெரியுமா சமா ...ம் ? என் கதையைப் படிக்கிற ...கள் இப்போது இரண்டு மடங்கு ...கிவிட்டார்கள் !

இரண்டாவது ஆசிரியர் :— ஓகோ ! ...படியா ! உங்களுக்கு எப்பொழுது ...யாணமாச்சு ?

---

...ல் ஒரு காத தூரம் ஓடும் — கற்பனை ...லகத்தில் சஞ்சரிக்கும் கவி இந்தப் ...திரை விடுவிப்பதென்றால்......ரொம்ப ...ருதான் !''

இதை நினைக்கவே அவனுக்கு மறுபடி ...் சிரிப்பு வந்தது.

உள்ளே சென்ற பிறகும் ஆசா சிரிக் ...் சத்தம் கேட்கவே, "ஓ ! என்ன ...வமானம் !'' என்று சொல்லி சில் பாபு ...ந்தான். தனது கோட்டுப் பைகளில் ...யை விட்டுக் கொண்டு பக்கத்திலிருந்த ...ஜை யினருகில் போய் நின்றான். அந்த ...ஜையின் மேல் ஒரு பூந்தொட்டி ...த்திருந்தது. அந்தப் பூந்தொட்டிக்குக் ...ழ ஆசாவின் படம் ஒன்று வைக்கப் ...டிருந்தது. நடந்து நடந்து களைத்துப் ...ான ஆசா அந்தக் கல்பதருவின் கீழே ...ாப்பாறிக் கொண்டிருப்பது போல் ...ந்தது. அவள் முகத்தோற்றத்திலும் ...ாப்புத் தோன்றியது. அவளுடைய ...தல் சிதறிக் கிடந்தது. இரண்டொரு ...ம் அவள் முகத்தில் விழுந்து களைப் ...சோபையை இன்னும் அதிகரித்துக் ...டிக் கொண்டிருந்தது. அவன் அந்தப் ...தைக் கையில் எடுத்துப் பார்த் ...ன். ஒரு ஓரத்தில் அவனுடைய பெய ...மூன்று வருஷங்களுக்கு முன்பு ஒரு ...தியும் எழுதியிருந்தது. சில்பாபு ...தப் படத்தைப் பார்த்தவாறே. ...சா ! மூன்று வருஷத்துக்கு முன்பிருந்த ' ஆசா !'' என்று கூப்பிட்டான்.

"ஆனால் இன்று இந்தப் புது ஆசா என்னை எப்படி அவமானப்படுத்துகிறாள், பார்த்தாயா ? என்னைப் பார்த்துக் 'கட கட' வென்று சிரிக்கிறாள் : அலட்சியமாகப் பேசுகிறாள். காதல் என்பது வேறு ; காமம் என்பது வேறு. காதலுக்கு ஆத்மாவுடன்தான் சம்பந்தம். காமத்துக்கும் ஆத்மாவுக்கும் ஒரு சம்பந்தமும் இல்லையென்று சொன்னால் அவளுக்கு நம்பிக்கை ஏற்பட மாட்டேன் என்கிறது.

"நான் உன்னைக் காதலித்தேன். மூன்று வருஷத்துக்குப்பின் இன்னும் உன்னைக் காதலிக்கிறேன். ஆனால் என்னை மன்னித்துவிடு, ஆசா ! என்னால் உன்னுடைய இந்தப் புதிய உருவத்தை அறிய முடியவில்லை ; முடியவும் முடியாது. மூன்று வருஷங்களுக்குப் பின், சிறைக் கூடத்துக்குள்ளிருந்து வெளியேற்றப்பட்டதும், உனக்குக் கல்யாணம் ஆகிவிட்டது என்ற செய்தியைக் கேள்விப்பட்டேன். எனக்கு அப்பொழுது தலையே சுழம்பிவிட்டது. ஆனால் ஏழையான நான் உனக்கு உன் விவாகத்தின் ஞாபகார்த்தமாக என்ன வெகுமதியளிக்க முடியும் ? என்னுடையது என்றிருந்ததைத்தான் நான் உனக்கு முன்னமேயே வெகுமதியாக அளித்து விட்டேனே ! உள்ளத்தைத் தவிர உயர்ந்த வஸ்து வேறு என்னிடம் ஏது ?'' என்று என்னென்னவெல்லாமோ தன் மனக்குள் சொல்லிக் கொண்டான்.

கோட்டுப் பையிலிருந்து ஒரு பாக்கெட்டை எடுத்து மேஜையின்மீது வைத்துவிட்டுப் பித்தனைப் போல அவன் வெளியேறினான். ஆசா வாசற்படியில் மௌனச் சிலையாக நின்று அவனுடைய புலம்பலைக் கேட்டுக் கொண்டுதானிருந்தாள். "சில்பாபு ! சில்பாபு ! டீ சாப்பிட்டு விட்டுப் போங்கள். சொல்வதைக் கேளுங்கள்'' என்று அவள் அவனை வருந்தி வருந்தி அழைத்தாள். ஆனால்...

தேநீர்க் கோப்பையை மேஜைமீது வைத்துவிட்டு அவசர அவசரமாக அவள் அந்தப் பாக்கெட்டை அவிழ்த்தாள். அது ஒரு கவிதைப் புத்தகம். "முல்லை'' என்ற பெயரில் சில் பாபு எழுதிய கவிதைகளின் தொகுதி !

ஆசாவுக்குத் துயரம் தாங்கவில்லை. பக்கத்திலிருந்த சோபாவில் அப்படியே 'தடால்' என்று உட்கார்ந்துவிட்டாள். இதயத் துடிப்பில் ஒரு மாறுதல் ! உடல் உதறல் எடுத்தது. ஆசாவின் தேகத்தில் ஒரு பெரும் பூகம்பமே ஏற்பட்டது போலிருந்தது.

அவள் எத்தனை நேரம் அப்படிப் பேசாமல் உட்கார்ந்திருந்தாளோ, தெரியாது. பிறகு அதைப் பிரித்தாள். முதற்









பக்கத்தில் "கடல் சிப்பியிடம் காட்டும் அன்பை—சிப்பி முத்தினிடம் காட்டும் அன்பை—உள்ளத்தைத் துளைத்துத்தன்னை மாலையாக அணிந்து கொள்பவளிடம் முத்து காட்டும் அன்பை—இந்த ஏழை ஆசாவிடம் காட்டுகிறான். அப்படிப் பட்ட ஆசாவுக்கு இந்நூல் சமர்ப்பணம்" என்று எழுதியிருந்தது.

ஆசாவின் கண்களில் இரு கண்ணீர்த் துளிகள் முத்துப் போல் கோத்து நின்றன. சில்பாபுவின் படம் இருந்த அடுத்த பக்கத்தை அவள் பிரித்தாள். அதே சமயம் அக் கண்ணீர் முத்துக்கள் சில்பாபுவின் அந்தப் படத்தின் மீது விழுந்து தெறித்தன.

'டிக் டிக்' என்று ஓயாமல் ஒழியாமல் ஓடும் கடிகாரம் எப்பொழுது மணி ஐந்தடித்ததோ, அவளுக்குத் தெரியாது. டாக்டர் சிரித்த முகத்துடன் ஆசாவின் அறைக்குள் "இன்று ஒரு வேடிக்கையான சம்பவம் நடந்தது" என்று சொல்லியவாறே நுழைந்தார்.

"ஒரு பைத்தியக்காரன் ஆஸ்பத்திரிக்குள் நுழைந்து கல்யாணம் ஆகி மூன்று வருஷத்துக்குப் பிறகு எனக்கு வாழ்த்துக் கூற வந்திருந்தான். நான் கம்பவுண்டரிடம் ஒரு ரூபாய்க்குத் தின்பண்டம் வாங்கி அவனுக்குக் கொடுக்குமாறு சொல்லி அவனை மெதுவாக வெளியே அனுப்பினபாடு பெரும்பாடாகி விட்டது!" என்று சொல்லிச் சிரித்தார்.

பிறகு உடையைக் களைந்து மாற்று உடை அணிந்து கொண்டிருந்த டாக்டர் திடீரென்று ஆசாவை திரும்பிப் பார்த்து, "என்ன படித்துக் கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டார்.

"முல்லை மலர்" என்றாள் ஆசா.

டாக்டர் அவளுடைய கையிலிருந்து புஸ்தகத்தை வாங்கிக் கொண்டார். வெகு நேரம் வரை அந்தப் பக்கமே திறந்திருந்ததால், சில்பாபுவின் படம் இருந்த பக்கமே திரும்பவும் பிரித்துக் கொண்டது. "சில்பாபு யார்?" என்று டாக்டர் தயக்கத்துடன் கேட்டார். அவர் கண்களுக்கெதிரே அதே பைத்தியக்காரனின் உருவம் காட்சியளித்தது.

"முல்லை மலரை எழுதியவர்!"

"என்ன, உனக்கு அவரைத் தெரியுமா?"

"அவரையா?" என்று கேட்ட போது அவள் நாத் தழதழத்தது. "தெரியும். என்னை அவர் காதலிக்கிறார்" என்று எப்படியோ சொல்லி முடித்தாள்.

"காதலிக்கிறாரா?" என்று கேட்ட டாக்டர் அதிசயத்தினால் அசையாமல் அப்படி சிலை போல நின்றார்.

"ஆமாம்" என்று சொன்ன ஆசா "காமம் இல்லாத காதல் ஒன்று இருக்கிறது என்பது உங்கள் விவேக புத்திக்கு எட்டவேயில்லையல்லவா?" என்று சில்பாபு கேட்ட அதே கேள்வியை டாக்டரிடம் கேட்டாள்.

அதைக் கேட்டதும் டாக்டர் 'கட கட'வென்று சிரித்தார்.

— ஹிந்திக் கதையின் மொழிபெயர்ப்பு



## ஜுரத்தில்

உஷ்ணம் 102 டிக்ரிக்கு மேலே போனால், உங்கள் கூந்தல் உதிர்வது நிச்சயம். அம்மையானாலும் சரி, 'டைபாயிட்' 'மலேரியா' 'இன்புளுயன்ஸா' முதலிய விஷ ஜுரங்களானாலும் சரி, சூடு காரணமாகவே மயிர் அபரிமிதமாகக் கொட்டுகிறது. ஜுர சமயங்களில் உஷ்ணம் அதிகமாக ஏறு விடினும், மயிர் உதிர்வது மட்டும் தவறுவதே யில்லை. அப்படி உதிரும்போது தக்க சிகிச்சை செய்து தடுக்காமலிருந்து விட்டால், மயிர் விடாமல் உதிர்ந்து தலையும் வழுக்கையாய் விடும்.

வெள்ளம் வந்த பிறகு அணைபோடுவதேன்? மயிர் உதிர ஆரம்பிக்கு முன்னரே, கூந்தலைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள். ஜுரத்துக்குப் பிறகு கேசம் அரைப் பங்கு கால் பங்காகிக் குறைந்து விட்டால், கேசவர்த்தினியைக் கொண்டு கேசத்தை விருத்தி செய்து பூர்ணமாக்கிக் கொள்ளுங்கள். கடைசியாக எல்லாப் பரிக்ஷைகளும் செய்தான பிறகு கேசவர்த்தினியே கூந்தலுக்குச் சிறந்தது என்று தெரிய வந்தால், கேசவர்த்தினியை முதலிலேயே கைக்கொள்ளலாமே

# கேசவர்த்தினி

கூந்தலைப் பாதுகாப்பது விருத்தி செய்வது அழகு படுத்துவது

**விலை அணா 14**

(மேற் செலவு வேறு)

எல்லாக் கடைகளிலும் கிடைக்கும்

தயாரிப்பவர்:

**தென் இந்திய ரஸாயனசாலை**
**கிராஸ் கட் ரோடு, கோயமுத்தூர்**

# கல்கி

தமிழ் நாட்டின் தலை சிறந்த வாரப் பத்திரிகை

•

ஒவ்வொரு வாரமும் சனிக்கிழமை கொழும்பில் விற்பனைக்குக் கிடைக்கும்

•

இலங்கையில் ஏஜண்டுகளில்லாத ஊர்களில் ஏஜண்டுகள் தேவை. விபரங்களுக்கு எமக்கு எழுதவும்

•

## வெஸ்டன் நியூஸ் ஏஜன்ஸீஸ்

170, ஆட்டுப்பட்டித் தெரு
கொழும்பு

## 258. ஜாக்கிரதையாகவே இருங்கள்!

விஷயம் என்ன என்று விசாரிப்பதற்கு வானரப் படையின் காவலாளரான மயிந்தன், துமிந்தன் என்ற இருவரும் வந்தார்கள் என்பதைப் பார்த்தோம்.

வந்த அரக்கர்களைப் பார்த்து மயிந்தன் விசாரிக்கிறான். "நீங்கள் யார்? என்ன ஜோலியாக இங்கே வந்தீர்கள்? போர் செய்வதாக எண்ணமா, அல்லது வேறு காரியமா?"

'யார், இவண் எய்திய
கருமம் யாவது,
போர்அறிர் புரிதிரோ,
புறந்தொரர் எண்ணமோ,—
சார்புற நின்றநீர்
சமைந்த ஆறெலாம்
சோர்விலீர் மெய்ம்முறை
சொல்லுவீர்!' என்றார்.

[யார்: நீங்கள் யார்; இவண் எய்திய கருமம் யாவது: இங்கு வருவதற்கான காரியம் எதுவோ; சார்புற நின்ற நீர்: எங்கள் பக்கத்திலே ஒட்டிய வாறாக நிற்கிறீர்கள் நீங்கள். ஆகையால் சிநேகிதப் பாங்குடனேயே நிற்கிறீர்கள் என்று கருதுகிறேன்; சமைந்த ஆறெலாம்: என்ன என்ன நேர்ந்திருக்குமோ அதையெல்லாம்; சோர்விலீர் மெய்ம்முறை சொல்லுவீர்: சிறிதும் தயங்காமல் உண்மையை அப்படியே சொல்லுங்கள்; என்றான் வானர வீரனான மயிந்தன்.]

* * *

விபீஷணனோடு வந்த அரக்கனான அனலன் பதில் சொல்லுகிறான்:

"சூரிய வம்சத்து அரசர்களுக்கெல்லாம் உறைவிடமாய் அவதரித்தவன் ராமன். ராமனையே சரண் அடைய வந்திருக்கிறான் இந்த விபீஷணன்."

'பகலவன் வழிமுதல்ப்
பாரின் நாயகன்,
புகலவன் கழலடைந்(து)
உய்யப் போந்தனன்;—
தகவுறு சிந்தையன்
தரும நீதியன்
மகன்மகன் மைந்தன், நான்
முகற்கு வாய்மையால்.'

[பகலவன் வழிமுதல்: சூரிய வம்சத்தைச் சேர்ந்த தனிச் சிறப்புற்ற அரசன் ராமன்; பாரின் நாயகன்: பூலோகச் சக்கரவர்த்தி; புகல் அவன் கழல் அடைந்து: அடைக்கலமாக அவனைச் சரண் புகுந்து நல்ல கதியை அடைய வந்திருக்கிறான்.

அப்படிப்பட்ட இவன் யார் என்று சொல்லுகிறேன்:—தகவுறு சிந்தையன்: உயர்ந்த பண்பு வாய்ந்த உள்ளத்தவன்; நான்முகற்கு மகன் மகன் மைந்தன்: பிரம்மாவுக்கு நேர் வாரிசு; வாய்மையால்: இவனுடைய சத்திய சீலத்தைச் சொல்ல வேண்டுமானால் அப்படித்தான் சொல்ல வேண்டும்.]

* * *

விபீஷணன் சம்பந்தமாக என்ன நிகழ்ந்தது என்று கேட்ட மயிந்தனுக்கு விபீஷணனுடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லி ஆகிவிட்டது.

பிறகு, நிகழ்ந்த செய்தியைப் பற்றிச் சொல்லுகிறான் அனலன்.

"முரட்டுத் தனத்திலேயே மனக சென்று அறிவில்லாமல் இருக்கிற ராவணன் விபீஷணனைப் பார்த்து இப்படிச் சொல்லி விட்டான்.

'பிறந்து விட்டாய் என் தம்பியாக, அதனால்தான் உயிர்பிழைத்துப் போகிறாய். இனி எங்கேயாவது

போய்த்தொலை. இங்கே நிற்பாயானால் செத்தாய் என்றே எண்ணிக் கொள்!"

மறந்தரு சிந்தையன்
மதியின் நீங்கினான்,
'பிறந்தனை பின்(பு), அதிற்
பிழைத்தி! போகுதி!—
இறந்தனை நிற்றியேல்'
என்ன,— இன்னவன்
துறந்தனன் எனவிரித்(து)
அனலன் சொல்லினான்.

[இன்னவன்: இந்த விபீஷணன்; துறந்தனன்: தமையனை விட்டு இங்கே வந்து விட்டான்; என விரித்து அனலன் சொல்லினான்: என்று விஷயத்தைத் தெளிவு படுத்தி அரக்கப் பிரதானியான அனலன் சொன்னான்.]

• •
•

வானர சேனாதிபதியான மயிந்தனுக்கு இவ்வளவும் உண்மைதான் என்று பட்டது. ஆனாலும் அரக்கனாய் இருக்கிறானே விபீஷணன் என்ற காரணத்தால் கொஞ்சம் அதிகமாகவே ஜாக்கிரதையுடன் இருக்கிறான்.

மயிந்தனும் அவ்வுரை
மனத்து வைத்து,'நீ
இயைந்தது நாயகற்(கு)
இயம்புவேன்' எனாப்
பெயர்ந்தனன்,— 'தம்பியும்
பெயர்வில் சேனையும்
அயர்ந்திலிர் காமின்' என்(று)
அமைவ(து) ஆக்கியே.

[மயிந்தனும் அவ்வுரை மனத்து வைத்து: அனலன் சொன்ன வார்த்தையை நன்றாய் ஞாபகப்படுத்திக் கொண்டு; நீ இயைந்தது நாயகற்கு இயம்புவேன் எனா: ராவணன் தம்பியாகிய நீ சரண்புக வந்த விஷயத்தை ராமனுக்குச் சொல்லுகிறேன் என்று சொல்லி விட்டு; பெயர்ந்தனன்; அவர்களை விட்டு நடந்தான்;—நடந்து செல்லும்போது—தம்பியும் பெயர்வில் சேனையும்: தம்பியே! சேனை வீரர்களே; அயர்ந்திலிர் காமின் என்று: அஜாக்கிரதையாய் இராமல் காவல் புரிந்து கொண்டிருங்கள் என்று; அமைவது ஆக்கியே: அந்த இடத்திலேயே தங்கும்படி—கட்டளை இட்ட பிறகு பெயர்ந்தனன்.]

இந்த விதமாக ஜாக்கிரதை பண்ணி விட்டு ராமனிடம் நேரே செல்லுகிறான் வானரர் தலைவன் மயிந்தன்.




## ஹிந்து மதம்

ஜூன் 19-ந் தேதி இதழில் 'காளியின் கருணை' என்ற தலைப்பில் தாங்கள் எழுதியிருந்த அற்புதமான கட்டுரையைப் படித்துப் பேரானந்தம் அடைந்தேன். "நம்முடைய ஹிந்து மதம் அத்தகைய தொட்டாற் சுருங்கி மதம் அல்ல. இதைக் காட்டிலும் ஆயிரம் மடங்கு அதிக வலிமையுள்ள எதிர்ப் பிரசாரத்தை எல்லாம் ஹிந்து மதம் வென்று இன்று வரை நிலைத்திருக்கிறது" என்று தாங்கள் எழுதியிருப்பது நூற்றுக்கு நூறு உண்மை.

நம் மதம் பழமையான மதம். அதை ஸ்தாபித்தவர் ஒருவர் என்றில்லை. அது ஸ்தாபிக்கப்பட்ட காலம் என்றும் ஒன்றில்லை. ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பு ஹிந்து மதமும் நாகரிகமும் புழங்கியிருக்கிறது. இன்றும் ஒரு குறைவுமின்றி ஹிந்து மதமும் நாகரிகமும் மகத்தான பெருமையுடன் பிரகாசிக்கிறது. மனிதவர்க்கம் உலகில் உள்ளவரையில் ஹிந்து மதம் அழியாமல் உன்னத நிலையில் இருக்கப் போகிறது.

ஆயினும் ஹிந்து மதத்தின் பெயரால் சில இடங்களில் குறுகிய புத்தியும், வெறுக்கத் தக்க மூடப் பழக்க வழக்கங்களும் வளர்க்கப்பட்டு வருவதால்தான் நாஸ்திகப் பிரசாரம் உலவி வருகிறது. ஹிந்துக்களில் பலருக்கு நம் மதத்தின் உண்மையான கோட்பாடுகளும், சாஸ்திர விதிகளும் தெரியாது. அத்தகைய கோட்பாடுகளும், சாஸ்திர விதிகளும் எவை எவை என்பது பகவான் ராமகிருஷ்ண பரமஹம்சர், ஸ்வாமி விவேகானந்தர் முதலிய பல மகான்களின் வாழ்க்கை வரலாறுகளையும், அவர்களுடைய திருவாக்கினையும் ஊன்றிப் படித்தால் தெரியும். நாம் உபநிஷத உண்மைகளை மறந்தோம். அனாவசியமான குருட்டு ஆசாரங்களினால் சமூகத்திடையே வேற்றுமைகளை வளரவிட்டோம். ஸ்ரீ விவேகானந்தர் சொல்வதுபோல் 'நமது மதத்தைச் சமையலறையில் மட்டுமே புழங்க விட்டோம்.' இந்த நிலை மாறினால்தான் ஹிந்து மதம் ஒளிபெறும். நம் நாடு உலகத்துக்கு வழிகாட்ட முடியும். புராண காலத்துக்கும் முந்திய வேதாந்தங்களும், உபநிஷத்துக்களுமே ஹிந்து மதத்தின் ஆணிவேர். அவைகளில் காணும் விதிகளே நம் மதக் கோட்பாடுகள் என்பதை மக்கள் உணரும்படி செய்யவேண்டும்.

சென்னை
21—6—49
ப. ராமமூர்த்தி

○●○

## இது சாத்தியமா?

சென்ற 19—6—49 இதழில் "அணைகட்டுவோம்! ஆற்றைத் தேக்குவோம்!" என்ற தலைப்பில் தலைமை இன்ஜினியர் ஸ்ரீ வேங்கடாச்சாரியார் சாதிக்கக் கூடிய எதையும் சாதித்து விடுவார் என்று தாங்கள் எழுதியிருந்ததை நான் ஒப்புக் கொள்கிறேன். தயவு செய்து அவரிடமிருந்து கீழ்க்காணும் வினாக்களுக்கு விடை எதிர் பார்க்கிறேன்.

1. சென்ற சில ஆண்டுகளாக மேட்டூர் நீர்த் தேக்கத்தில் போதுமான அளவு தண்ணீர் இல்லாததால் பாசன வசதியும், மின்சார உற்பத்தியும் குறைவுபட்டுத் தஞ்சை ஜில்லா வாசிகளும் மற்றவரும் படும் துயரம் தங்களுக்குத் தெரிந்ததே. இதன் நடுவில் மந்திரி கனம் ஸ்ரீ பக்தவத்ஸலம் புதுக்கோட்டை முதலிய இடங்களுக்கும் சேலத்திற்கும் இன்னும் பல நகரங்களுக்கும் காவிரியாற்றுத் தண்ணீர் அடையும்படி ஏற்பாடு செய்யப் போவதாகக் கூறியிருக்கிறார். இது சாத்தியமா?

2. மேட்டூர் அணைக்கு வேறு ஏதாவது வற்றாத ஆறுகளிலிருந்தோ அல்லது அணைக்கட்டுகளிலிருந்தோ தண்ணீர் தேவையான காலத்திலாவது அனுப்ப வசதிகள் இருக்கின்றனவா? அதைப் பரிசீலனை செய்து மேட்டூரில் தண்ணீர்த் தட்டு இல்லாமல் செய்தால், ஏராள உணவு உற்பத்தி செய்ய இயலுவதுடன் தொழிற்சாலைகளுக்கு வேண்டிய மின்சாரமும் தடையின்றி கிடைக்குமல்லவா?

3. அடிக்கடி ஆற்றின் ஜலத்தை மூடித் திறப்பதால் காவிரி ஆறு வருஷா வருஷம் கீழ்த் திசையில் வேகமாக மேடாகி வருவதைத் தடுக்க ஏற்பாடு உண்டா?

கும்பகோணம்
20—6—49
ரி. வைத்தியநாதய்யர்

○●○

## குற்றங் கூறாதீர்கள்!

ஜூன் 12ம் தேதி 'கல்கி'யில் நண்பர் ஸ்ரீ பி. மாரி செட்டி அவர்கள் எழுதியுள்ள கடிதம் என் கவனத்தைக் கவர்ந்தது. அவர் தான் அதிகப்படியாகக் கொண்டு வந்த சாமான்களுக்கு 'சார்ஜ்' கட்டி ரசீது வாங்கிய பிறகும் டிக்கெட் கலெக்டர்களுக்குப் பணம் கொடுத்ததாகக் கூறுவதை நம்ப முடியவில்லை. கட்டவேண்டிய தேவையில்லை. அப்படியே அவர் கொடுத்திருந்தாலும் ஒரு சிலர் இம்மாதிரி பணம் வாங்கியதற்காக, "துவார பாலகர்" என்றும் "ரயில்வே துவார பாலகர்களின் அட்டூழியம் என்று நிற்குமோ?" என்றும் எல்லா டிக்கெட் கலெக்டர்கள் மனமும் புண்படும்படியாகக் குற்றம் சாட்டுதல் கண்டு வருந்துகிறேன்.

ரயில்வே உத்தியோகஸ்தர்கள் பொதுஜன ஊழியர்களே. பொது ஜனங்கள் அவர்களுடன் ஒத்துழைத்தால்தான் அவர்கள் கடமையைச் சரிவரச் செய்ய முடியும். பொதுஜனங்களே அவர்களை லஞ்சம் கொடுத்து கெடுக்க முயன்று விட்டுக் குற்றமும் சாட்டினால் அவர்கள் என்ன செய்வார்கள்?

லஞ்சம் கொடுக்காமலும், ரயில்வே ஊழியர்களைக் குறை கூறாமலும் தாங்களே சீரிய முறையில் நடந்து, சுதந்திர இந்திய ரயில்வேயின் வருமானம் உயரச் செய்யும் அளவுக்கு நம் மக்களின் மனப்பண்பு என்று மாறுமோ?

நாகப்பட்டினம்
19—6—49
ரி. கந்தசாமி
(சீனியர் கிளார்க்.)

## நாகர்கோவில் ரஸ்தா

மூன்று வருஷங்களுக்கு மேலாக பம்பாயிலே வசித்துவிட்டு, சொந்த ஊராகிய நாகர்கோவிலைப் பார்க்க ஆவல்கொண்டு வரும் வழியில் அனுபவித்த சம்பவங்களைத் தங்களுக்கு எழுதுகிறேன்.

இரவும் பகலும் கண் விழித்து, இருக்க இடமின்றி, கூட்டத்தில் நசுங்கிய வண்ணம் ஒருவிதம் திருநெல்வேலியை வந்தடைந்தேன். ஆஹா! இதோ 59 மைல் தூரம்தான். சொந்த ஊரைப் பார்க்கப் போகிறோம் என்ற ஆசையில் பஸ்ஸில் ஏறினேன். புது ரகமான வண்டிதான். ஆனால் திருநெல்வேலியிலிருந்து நாகர்கோவில் செல்லும் ரோட்டின் அழகை என்னவென்று சொல்வது?

ஒரு சமயம் தொட்டில்போல் ஆடும்! மறு சமயம் குழியில் திடுமென்று இறங்கும். திடீரென்று ஒரு மேட்டில் ஏறும். பிறகு ஒரு சரிவு, ஓர் ஏற்றம், ஒரு தாழ்வு! அப்பப்பா! வர்ணித்து முடியாது.

'திருநெல்வேலி ஜில்லா போர்டு எல்லை' என்று ஓர் கைகாட்டி அங்கு காணப்படுகிறது. அதுவரையிலுமாவது ரோடு சுமாராக இருக்கிறது. ஆரல் வாய்மொழி கங்கத்திற்குப் பிறகு உள்ள பாதையை நினைத்தால் இப்பொழுதே குடல் வெளியே வந்துவிடும் போலிருக்கிறது.

வண்டி ஓட்டிச் செல்லும் டிரைவர் கூறினார்: "சீ! இது என்ன ரோடு சாமி. திருவனந்தபுரம் ரோடா யிருந்திருக்குமானா ஒன்றரை மணிக்குள்ளே கொண்டு தள்ளிடமாட்டேன்! இந்த ரோட்டிலே 4-மணி நேரம் ஆகிறது. புதிய மோட்டார் வந்தும் விமோசனமில்லை. ரோடு பழைய மாதிரியேதான் இருக்குது." டிரைவர் சொல்வது முற்றிலும் உண்மைதான்.

தூர தேசத்திலிருந்து வந்தவர்கள் பாடு மிகவும் கஷ்டம். திருநெல்வேலி ரோடில் சவாரி செய்துவிட்டு வீட்டுக்கு வந்தால், ஒருவாரம் படுக்க வேண்டியதுதான்.

திருநெல்வேலியி லிருந்து, நாகர்கோவில் வரைக்கும் உள்ள பகுதி எந்த சர்க்காரைச் சேர்ந்திருந்தாலும் சரி முதலில் கவனிக்கவேண்டிய விஷயம் ஆகும். அதுவும் ஆரல் வாய்மொழி நாகர்கோவில் ரஸ்தாவை உடனே சீர்ப்படுத்த வேண்டும்.

நாகர்கோவில்
31—5—49 வே. ராமநாதன்

## நிம்மதி உண்டேல் உலகமில்லை!

"நிம்மதி இல்லை" "நிம்மதி இல்லை" என்று பலர் வட்டமேஜைக் கடிதங்களில் எழுதி வருகின்றனர். நிம்மதியாக எவன் இந்த உலகில் வாழ முடியும்? ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு தொல்லை இருந்துகொண்டுதான் வருகிறது. எல்லோரும் நிம்மதியாக வாழ்ந்துவிட்டால் பிறகு உலகத்தில்தான் என்ன இருக்கிறது? அதனால் எல்லோரும் கஷ்டப்படவேண்டும் என்று நான் சொல்லவில்லை. இன்பமும் துன்பமும் மாறி மாறி வந்தால்தான் வாழ்க்கை ரசிக்கும். அதனால் நிம்மதியாக எவரும் இந்த உலகில் வாழவே முடியாது. எல்லாவற்றையும் துறந்த யோகிகள் தான் நிம்மதியாக வாழலாம்.

பட்டுக்கோட்டை
7—6—49 செள. ஜெயந்திபாய்

○●○

## ★ பெயர் மாற்றம்

இந்தியாவின் முக்கிய பட்டணமாகிய டில்லிக்கு காந்திஜியின் ஞாபகார்த்தமாக அவருடைய பெயரை வைக்கும் யோசனைபற்றிப் பத்திரிகைகளில் படித்தேன். தற்காலத்தில் எங்கு பார்த்தாலும் பெயர் மாற்றமாகவே இருக்கிறது. காந்தி நகர், காந்தி தெரு, தெரு பார்க் என்று சிறிய சிறிய இடங்களுக்கெல்லாம் பெரியவர்களுடைய பெயரை வைத்திருக்கிறார்கள். இதனால் அவர்களைத் தாங்கள் கௌரவம் செய்து விட்டதாக ஜனங்கள் நினைக்கிறார்கள். 'அந்தத் திருட்டு எங்கு நடந்தது?' என்று கேட்டால் 'அதுவா? காந்தி தெருவில் நடந்தது!' என்று சொல்கிறார்கள். பெரிய மஹானின் பெயரை வைத்துவிட்டு அங்கு கெட்ட காரியம் நடந்தால் அதில் என்ன மரியாதை இருக்கிறது? புகை பிடித்தல் என்பது காந்திஜிக்குப் பிடிக்காத விஷயங்களில் ஒன்று. அப்படி இருக்க 'காந்தி பீடி' என்றால் அது அவருக்கு நாம் காட்டும் மரியாதையா?

பெரியார்களின் பெயரை வைத்தால் மட்டும் போதாது. அவர்களுடைய கொள்கைகளைக் கடைப்பிடித்தலே, அவர்களின் சிறந்த ஞாபகார்த்தமாகும். அதுவே நாம் அவர்களுக்குக் காட்டும் மரியாதையுமாகும்.

காந்திஜியின் ஞாபகார்த்தம் ஏற்படுத்துவதா யிருந்தால் அது உலகத்தின் அதிசயங்

## மந்திரி சபை விளையாட்டு!




"அப்பா—அம்மா விளையாட்டு வேண்டாம்; ஒரே சண்டையாயிருக்கும்!"

"அப்படியானால் மந்திரி சபை விளையாட்டு விளையாடலாமா?"

"நல்ல யோசனை! நான் பிரதம மந்திரியாயிருக்கிறேன்!"

"அதெல்லாம் முடியாது; நான்தான் பிரதம மந்திரியாயிருப்பேன்!"



வாலிபன் :—வயது காலத்திலே பெரியவாள் இப்படி நின்று கொண்டேயிருக்கேளே ?

பெரியவர் :— எனக்கு வயதாச்சு என்று சொல்கிறாய் ? நீயும் என்னைப் போல பஸ்ஸுக்குக் காத்திண்டிருந்தால், உனக்கும் வயதாகிவிடும் !

---

களில் ஒன்றாக அமைய வேண்டும். என்றும் அழியாமல் ஒரு பெரிய கட்டடம் கட்டி, அதில் அசோகரின் கல்வெட்டுப்போல் காந்திஜியின் போதனைகளைச் செதுக்கி வைத்தால், மிகவும் போற்றத் தக்கதாக இருக்குமே! ஞாபகார்த்தம் இருந்தாலும், இல்லாவிட்டாலும் அவர் பெயர் உலகம் இருக்கும் வரை ஒருநாளும் மறையாது. சிறு விஷயங்களுக்கெல்லாம் அவர் பெயரை இழுக்காமல் இருப்பது நல்லது.

திவாகராயநகர்
20—5—49 கே. பத்மாவதி

○●○

## யாருக்கு லாபம் ?

சென்னை சர்க்கார் இப்பொழுது விதித்துள்ள புதிய வரித் திட்டங்களில் 'பஸ்' வரி உயர்வும் ஒன்று. அதாவது முன்பிருந்த வரியை விட மூன்று மாதத்திற்கு 'ஸீட்' ஒன்றுக்கு ரூ. 17 அதிக வரி விதிக்கப் போகிறார்கள். இந்த வரி உயர்வுக்காக இப்பொழுது மைலுக்கு ஆறு தம்பிடி விதமிருக்கும் பஸ் கட்டணத்தை ஆறரை தம்பிடியாக வசூலிக்கலாமென்று (நகரங்களைத் தவிர) மற்றப் பிரதேசங்களிலுள்ள பஸ் சொந்தக்காரர்களுக்குச் சலுகை கொடுத்திருக்கிறார்கள். இந்த அதிக வரிப்பளு முழுவதும் பொது ஜனங்களைத்தான் பாதிக்கும். அதோடல்லாமல் பஸ் கம்பெனிகளுக்கு மேலும் அதிக லாபத்தைத்தான் தருகிறது.

திருநெல்வேலிக்கும் நாகர்கோவிலுக்குமிடையே சுமார் 60 மைல் தூரமிருக்கிறது. ஒரு பஸ் ஒரு நாளைக்குள் திருநெல்வேலியை விட்டுப் புறப்பட்டு நாகர்கோவிலை அடைந்து மறுபடியும் அங்கிருந்து திரும்பி விடுகிறது. அப்பொழுது அந்த பஸ் நாள் ஒன்றுக்கு 100 மைல் பிரயாணம் செய்கிறது. இதற்கு இப்போதைய மைலுக்கு ஆறு தம்பிடி விதம் கட்டணம் ஒரு நபர் போக வர ரூ. 3—2—0 வசூலிக்கிறார்கள். இனிமேல் வரப் போகும் ஆறரை தம்பிடி விதமானால் ஒரு நபரிடம் போகவர ரூ. 3—6—0 வசூலிக்கப் போகிறார்கள். இதனால் நாள் ஒன்றுக்கு 'ஸீட்' ஒன்றிற்கு நான்கு அணா அதிகக் கட்டணம் பஸ்காரர்களுக்குக் கிடைக்கிறது. ஆகவே மூன்று மாதத்திற்கு (90 நாளைக்கு) ரூ. 22—8—0 அதிகக் கட்டணம் பஸ்காரர்களுக்குக் கிடைக்கிறது. ஆனால் அவர்கள் செலுத்த வேண்டிய அதிக வரியோ ரூ. 17 தான்.

சர்க்கார் தங்கள் புதிய திட்டத்தின்படி ஜனங்களிடமிருந்து ரூ. 22—8—0 யை வசூலித்து பஸ் சொந்தக்காரர்களுக்குக் கொடுத்து விட்டு, அவர்களிடமிருந்து ரூ. 17 ஐப் பெற்றுக் கொள்கிறார்கள். பஸ்காரர்கள் இதன்படி ஒரு 'ஸீட்' டின் மூலம் ரூ. 5—8—0 லாபமடைகிறார்கள். ஒரு பஸ்ஸுக்குக் குறைந்தது 20 ஸீட் என்று கணக்குப் போட்டுப் பார்த்தாலும் ரூ. 110 லாபம் கிடைக்கிறது.

புதிய வரி விதிப்பினால் பஸ் கம்பெனிக்காரர்கள் சிறிதும் நஷ்டமின்றி லாபமடைகிறார்கள். சர்க்கார் இதைப் பரிசீலித்துத் திட்டத்தை மாற்றுவார்களா ?

சமுகரங்கபுரம்
18—6—49 எஸ். ராமகிருஷ்ணன்

○●○

## பண வீக்கம்

பண வீக்கம் என்பது ஒரு பெரிய தொத்து வியாதி. அதற்காக அநேக மருந்துகள் கண்டு பிடித்தும் ஒன்றும் பயன்படவில்லை. பணவீக்கம் என்பதற்குப் பதிலாக "விலை வீக்கம்" என்று சுருக்கமாகக் கூறினால் பொருத்தமாக இருக்கும். உற்பத்தி ஸ்தானத்திலிருந்து ஒவ்வொரு பொருளும் அநேக கைகள் மாறிக் கடைசியில் உண்மையாக உபயோகிப்பவனைப் போய்ச் சாருகதி அடைகிறது. அவன் அதை ஏற்றுக் கொள்வதற்கு அதன் மதிப்பை விட அதிக விலை கொடுத்து வாங்குகிறான். ஏனெனில், மத்தியில் உள்ள ஒவ்வொருவனுக்கும் கொஞ்சம் ஜீவனோபாயத்திற்கு வழியையும் செய்துவிட்டு வருகிறது. மத்தியில் உள்ளவர்கள் கொடுக்கும் லஞ்சமும் விலையை வீங்கச் செய்கிறது.

சர்க்காருக்கு விலையைச் சட்டபூர்வமாக உயர்த்தவும் குறைக்கவும் அதிகாரம் உண்டு. விலையை உயர்த்துவதால் முதலாளிகள் சந்தோஷம் அடைகிறார்கள். விலையைக் குறைப்பதால் பொது ஜனங்கள் திருப்தி அடைவார்கள். பொதுஜன சேவையைக் கோரி சர்க்கார் முக்கியமான சாமான்களின் விலையைப் படிப்படியாகக் குறைத்துச் சண்டைக்கு முன்னிருந்த விலைவாசிக்குக் கொண்டுவர வேண்டும். முதலில், இரும்பு, உடை, உணவு, முதலிய பொருள்களில் பரிசை செய்யலாம். விலையைக் குறைப்பதற்கு முன், சர்க்கார் மிகப் பெரிய பிரசாரம் ரேடியோ, தினப் பத்திரிகை, தண்டோரா மூலம் ஒவ்வொரு கிராமத்திலும் நகரத்திலும் எல்லா இடங்களிலும் ஒரு மாதம் செய்ய வேண்டும். பிறகு விலையைப் படிப்படியாகக் குறைத்துக்கொண்டே வர வேண்டும். அப்படிச் செய்வதால், அவசியம் உள்ளவன் கூட சாமானை வாங்கிச் சேகரிக்காமல் வேண்டிய அளவிற்கு வாங்கிக்கொள்வான். வியாபாரிகள், சாமான் விலை குறைந்து போய்விடும் என்று சீக்கிரமே விற்பதற்கு முயற்சி செய்வார்கள். மத்தியில் உள்ளவர்கள் (சில்லறை வியாபாரிகள்) தாமாகவே குறைந்து போவார்கள்.

ஜம்ஷெட்பூர்
16—6—49 ஆர். பி. எஸ். மணி

---

★ வட்ட மேஜைப் பரிசுத் தொகை ரூ. 25-ஐ 'இந்து மதம்' என்ற கடிதம் எழுதிய சென்னை ஸ்ரீ ப. ராமமூர்த்திக்கும் 'பெயர் மாற்றம்' என்ற கடிதம் எழுதிய தியாகராயநகர் கே. பத்மாவதிக்கும் ரூ. 12—8—0 விதம் பிரித்து வழங்கப்பட்டது.

# டயபெப்ஸின்




ஆகாரம் சரிவர ஜீரணமாக டயஸ்டாஸ், பெப்ஸின் என்னும் இருவகைப் பொருள்கள் அத்யாவசியமானவை. இவைகள் இரண்டும் உயர்ந்த ரசாயன முறையில் சேர்ந்ததுதான் டயபெப்ஸின். ஆகாரத்துக்குப் பின் ஒரு டீஸ்பூன் டயபெப்ஸின் உட்கொண்டால் ஜீரணச் செயல் க்ஷணமே ஆரம்பித்து, பாக்கி ஜீரண வேலை வயிற்றுக்கு மிக எளிதாகிறது. உங்கள் ஆகாரத்தின் முழுப் போஷணையும் அடைய இதுவே சிறந்த மார்க்கம்.

**யூனியன் டிரக், கல்கத்தா**

ஏஜண்டுகள்: அப்பா அண்டு கோ., மதராஸ்
மற்றும் எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்

**UNION DRUG. CALCUTTA**

---

## பார்லி வாட்டரும், கஞ்சியும் இவ்விதம் சுலபமாகத் தயாரிக்கலாம்




**பார்லி வாட்டர்:** பியூரிடி பார்லி இரண்டு டீஸ்பூன் மட்டத்திற்கு எடுத்துக்கொண்டு சிறிது ஜலம் சேர்த்துக் கலந்து ஒரு பைண்ட் ஜலம் விட்டு ஐந்து நிமிஷம் கொதிக்கவிடவும். பிறகு ருசிக்குத் தக்கபடி உப்பு சர்க்கரை அல்லது எலுமிச்சம்பழ ரஸம் சேர்க்கவும்.

**கஞ்சி:** இதை வழக்கம்போலத் தயாரிக்கவும். ஆனால் தயாரிக்க இருபது நிமிஷ நேரம் தான் ஆகும். ஒரு ஸ்பூன் பியூரிடி பார்லி எட்டு ஸ்பூன் சாதாரண பார்லி அரிசிக்குச் சமம் என்பது ஞாபகமிருக்கட்டும்.

**பியூரிடி பார்லி**

அட்லாண்டிக் (ஈஸ்ட்) லிமிடெட், தபால் பெட்டி 664, கல்கத்தா.

APB2-6 TAM

**இணையிலா சமயம்!** **சொற்ப ஸ்டாக்கே உள்ளன!** **அரிய சந்தர்ப்பம்!**

இந்த கடிகாரங்கள் பெயர்பெற்ற டைம்ஸ், ஓரிஸ், மெண்டர் கம்பெனிகளின், ஸ்விஸ் தயாரிப்பு. ஒவ்வொன்றும் மூன்று வருஷ உத்தரவாதம். திருப்தி யளிக்காவிடில் பணம் வாபஸ் செய்யப்படும். ஒரு கடிகாரம் வாங்கினால் ஒரு பாக்கெட் கடிகாரமும், இரண்டு கடிகாரங்கள் வாங்கினால் ஒரு அலாரம் கடிகாரமும் இலவசமாக அளிக்கப்படும். எல்லா இடங்களிலும் ஏஜண்டுகள் தேவை.





| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| பிரைட் க்ரோம் | 23/- | ரோல்டு கோல்டு | 25/- | 5 ஜுவல் க்ரோம் | 33/- | ரோல்டு கோல்டு | 38/- |
| 4 ஜுவல் .. | 24/- | .. .. | 29/- | 7 ஜுவல் .. | 34/- | .. .. | 39/- |
| 7 ஜுவல் .. | 32/- | .. .. | 35/- | 15 ஜுவல் .. | 46/- | .. .. | 51/- |
| 15 ஜுவல் .. | 38/- | உயர் ரகம் | 45/- | பாக்கெட் வாட்ச் | 10/- | அலாரம் கடிகாரம் | 22/- |

**JOHNSON WATCH CO., 137, Cotton Street (K. M.) CALCUTTA 7**

# போனோமிண்ட்

## பேதியாகும் சூயிங்கம்




திவ்யமான பெப்பர்மிண்ட் மிட்டாய் போல் சுவையுள்ளது. அதிலுள்ள மருந்து சத்துக்கள் உமிழ்நீரோடு கலந்து உதர கோசங்களில் சேர்கின்றன. இது மலபோக்கை செம்மையாக எளிதில் சரிப்படுத்துகிறது.

**போனோமிண்ட் பேதியாகும் சூயிங்கம்**

சென்னை மாகாணத்துக்கு விற்பனை ஏஜண்டுகள்:
மெஸர்ஸ். ஓரியண்டல் மர்க்கண்டைல் ஏஜன்ஸி, 99-ஏ, அரமனைக்காரத் தெரு, மதராஸ் - 1




# கிரைப் ஸிரப்




92 26 TM

வயிற்றுப்புளிப்பையும், உப்புசத்தையும் நீக்கும். ஊறலியற்றது.

## குழந்தைகள் அதை விரும்புவர்

ஒவ்வொரு தாயும் ஒரு புட்டி கைவசம் வைத்திருப்பது அவசியம்.

தயாரிப்பவர்கள்
மைசூர் இண்டஸ்ட்ரியல் & டெஸ்டிங் லாபரேடரி லிட்.,
மல்லேஸ்வரம், பெங்களூர்.

விற்பனை ஏஜண்டுகள்:
**பெஸ்ட் & கம்பெனி லிமிடெட்.**
தபால்பெட்டி நெ. 63, மதராஸ்.

---

## இருமல், அவஸ்தை யளிக்கும் ஆஸ்துமா, மார்ச்சளி 3 நிமிஷங்களில் ஒழிக்கப்படுகின்றன

ஆஸ்துமா, மார்ச்சளி தாக்குதலால் மூச்சுத் திணறி தூக்கமின்றி அவதியுறுகிறீர்களா? அதிகமாக இருமுவதால் பிராணவஸ்தையாக இருக்கிறதா? பலஹீன உணர்ச்சியினால் வேலை செய்ய அசக்தராகவும், குளுமையான சில வஸ்துக்களையும் உணவுகளையும் சாப்பிட முடியவில்லையா?

எவ்வளவு நாட்களாக உபாதையுற்று எதை உபயோகித்திருப்பினும் சரி, மெண்டாகோ (Mendaco) ஓர் புதிய நம்பிக்கை அளிக்கும். மயக்க மருந்துகளில்லை, புகை பிடித்தலில்லை, இஞ்செக்ஷனில்லை. ஆட்டோமைஸர் தேவையில்லை செய்ய வேண்டியதெல்லாம் ருசியற்ற இரண்டு பில்லைகளை சாப்பாட்டின்போது உட்கொள்ள வேண்டியதே. உபத்திரவங்கள் மாயமாக மறைந்து விடும். மூன்றே நிமிஷங்களில் மெண்டாகோ (Mendaco) இரத்தத்துடன் கலந்து வேலை செய்யத் தொடங்கி, கபத்தைக் கரைத்து சிரமமின்றி ஸ்வாசத்தை அபிவிருத்தி செய்து முதல் நாள் இரவே நல்ல நித்திரையை அளித்து விரைவில் பல வருஷங்கள் யௌவன உணர்ச்சியையும் பலத்தையும் பெறுவீர்கள்.

### 2 வருஷங்களாக ஆஸ்துமா இல்லை

மெண்டாகோ (Mendaco) அநேகமாக உடனே குணமளித்து ஸ்வாசத்தை இலகுவாக்குவது மட்டுமின்றி எதிர்கால தாக்குதல் ஏற்படாது செய்கிறது. உதாரணமாக ஜெ. சிச்சர்ட்ஸ், ஹாமில்டன், ஒன்ட், கானடா, இருமல் மூச்சுத் திணறலால் இரவு தூக்கமின்றி 40 பவுண்டு எடை குறைந்து, இறந்து விடுவார் என எதிர்பார்க்கப்பட்டது. மெண்டாகோ (Mendaco) ஆஸ்துமாவை முதல் நாளே நிறுத்தி விட்டது. இரண்டு வருஷங்களில் அவ்வுபாதையே மீண்டும் ஏற்பட்டதில்லை.

### பணம் வாபஸ் உத்தரவாதம்

மெண்டாகோ (Mendaco) முதல் வேளை சாப்பிட்டதுமே நேரடியாக ரத்தத்துடன் கலந்து ஆஸ்துமாவை ஒழிக்கிறது. மெண்டாகோ (Mendaco) அதிவிரைவில் வயதில் பல வருஷம் யௌவன உணர்ச்சி, பலம் இவற்றை அளிக்கிறது. வாபஸ் உத்தரவாதத்தின் கீழ் மெண்டாகோ (Mendaco) உபயோகித்துப் பார்த்து தீர்ப்பளியுங்கள். மெண்டாகோ (Mendaco) சாப்பிட்டபின் பூரண குணம் பெற்று திருப்தியளிக்காவிடில் வெற்றுப் பெட்டியை அனுப்பினால் முழுத் தொகையும் வாபஸ் செய்யப்படும். இன்றே மருந்து வியாபாரியிடமிருந்து மெண்டாகோ (Mendaco) வாங்குங்கள். இன்றிரவு எப்படித் தூங்குகிறீர்கள், மறுநாள் காலை எவ்விதமான தெம்புணர்ச்சி ஏற்படுகிறதென்பதையும் பாருங்கள், உத்தரவாதம் உங்களுக்குப் பாதுகாப்பு அளிக்கிறது.

**Mendaco**

**மெண்டாகோ**

★ ஆஸ்துமா ★ மார்ச்சளி நோய் ★ ஹே ஜுரம் இவற்றை நிவர்த்திக்கிறது

Edited, Printed and Published by R. Krishnamurthy, at the "Kalki" Press
116-119, Sladens Gardens, Poonamallee High Road, Kilpauk, Madras

REGD. No. M. 4392